# மாண்டூக்ய உபநிஷதம்

(ஒன்றென்றிரு!)



சுவாமி பிரபஞ்சநாதன்

# நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | மாண்டூக்ய உபநிஷதம் |
| தொகுப்பு | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | தன்னாட்டம் |
| முதற் பதிப்பு | : | 2018 |
| நூலின் அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | 150 |
| தாள் | : | A5 (5.83" X 8.27") |
| எழுத்து அளவு | : | 12 புள்ளிகள் |
| உரிமை | : | அனைவருக்கும் |
| கட்டமைப்பு | : | சாதா பைண்டு அட்டை |
| கணினி அச்சு | : | ஓம் கிராபிக்ஸ் |
| விலை | : | அக விழிப்பு |

# மாண்டுக்ய உபநிஷதம்

========================

**உபநிஷத்தைப்பற்றி:**

----------------------

எல்லா உபநிஷத்துகளிலும் மிகவும் சிறியதான இந்த உபநிஷதம் அதர்வண வேதத்தில் உள்ளது. மாண்டுகர் என்ற முனிவரால் கேட்கப்பட்டு எழுதப்பட்ட இதில் மொத்தம் பன்னிரண்டு சுலோகங்களே உள்ளன.

இருப்பது ஒன்றே என்ற இந்தக் கருத்தை **"ஓம்"** என்ற பிரணவ மந்திரத்தின் மூலம் இந்த உபநிஷதம் விளக்க முயற்சிக்கின்றது.

அடிப்படை உண்மைகள் மூன்று. அவை **உலகம், மனிதன், இறைவன்.** இந்த மூன்றும் ஒன்றே அது ஓங்காரமே என்பதின் மூலம் இந்த உபநிஷதம் சுட்டிக்காட்டு கின்றது.

நான்கு பரிமாணங்களை உடையவர்கள் நாம் என்கின்றது இந்த உபநிஷதம்.

விழிப்புநிலை, கனவுநிலை, தூக்கநிலை என்ற மூன்று நிலைகளில் நாம் மாறி, மாறி சஞ்சரித்துக் கொண்டிருக்கிறோம்.

வீட்டிலும், அலுவலகத்திலும், சமுதாயத்திலும் ஒருவன் வெவ்வேறு அனுபவங்களைப் பெறுகிறான். வீட்டில் அவன் கணவன், மகன், சகோதரன் என்றெல்லாம் அறியப்படுகின்றான்.

அலுவலகத்தில் அவன் ஓர் அதிகாரி, எஜமான் என இத்தனை பரிமாணங்கள் அவனுக்கு இருந்தாலும், அவன் யார்? என்றால் இத்தனை பரிமாணங்களையும் உள்ளடக்கிய ஒரு மனிதன்.

நாமும் விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மூன்று நிலைகளிலும் மூன்று பரிமாணங்களில் உலகத்துடன் தொடர்பு கொள்கிறோம்.

விழிப்புநிலையில் இந்த உலகத்தினை அனுப விப்பது நமது முதற்பரிமாணமான **வைசுவானரன்,** கனவு நிலையில் அனுபவிப்பது **தைஜஸன்,** தூக்க நிலையில் **பிராஜ்ஞன்.**

இந்த மூன்றையும் உள்ளடக்கிய மொத்தப் பரிமாணமே **ஆன்மா.** இது நான்காம் பரிமாணம் என்று கூறப்படுகின்றது.

இந்த ஆன்மாவே மனிதன், அதாவது நாம். இத்னை இந்த ஓங்கார மந்திரத்தின் வாயிலாக இந்த உபநிஷத்தில் விளக்கப்படுகிறது.

பிரம்மம் [பரம்பொருள்], ஆத்மா, ஆத்மாவின் [மனிதனின்] நான்கு நிலைகள் [உள்ளுணர்வுகள்], இவற்றைப்பற்றி ஒரு சூத்திரமாக ஒரு சொல்லைக்கூட வீணாக்காமல் சொல்கிறது.

இந்த உபநிஷத்தே அத்துவைத தத்துவத்தின் அடிப்படையாக அமைகிறது. இறுதியில் பிரம்மமும், [பரம்பொருளும்] ஆத்மாவும் ஒன்றே என்று உறுதியாக நிறுவுகிறது.

ஆதிசங்கரரின் பரமகுருவான கௌடபாதர் இதற்கு விளக்கவுரை [காரிகை] எழுதியிருக்கிறார்.

இந்து சமயத்தின் ஒரு பெரும் பிரிவான அத்துவைத தத்துவத்தை நிலைநிறுத்த பகவான்

ஸ்ரீஆதிசங்கரரின் மனத்தில் கருவாகப் பரிணமித்தது இந்த உபநிஷத்தும், கௌடபாதரின் காரிகையும்தான்.

இறைவனே நம்மில் ஆன்மாவாக நிலவுவதை உபநிஷத்தின் இரண்டாம் மந்திரம் கூறுகின்றது. அதாவது ஆன்ம நிலையில் நாமும் இறைவனும் ஒன்று என்றாகின்றது.

எனவே **உலகமும் நாமும் இறைவனும்** தனித் தனியானவர்கள் அல்ல, மூன்றும் ஒன்றே என்பது இந்த உபநிஷத்தின் தனிப்பெரும் கருத்தாக உள்ளது.

## அமைதி மந்திரம்

================

**ப4த்3ரம் கர்ணேபி4: ஸ்ருணுயாம தே3வா: | ப4த்3ரம் பஸ்'யேமாக்ஷபி4ர்யஜத்ரா: | ஸ்த்தி2ரைரங்கை3ஸ்துஷ்டுவாம்ஸஸ்தநூபி4: வ்யசே'ம தேவஹிதம் யதா3யு: | ஸ்வஸ்தி ந இந்த்3ரோ வ்ருத்3த4ஸ்ரவா: | ஸ்வஸ்தி ந: பூஷா விஸ்'வவேதா3: | ஸ்வஸ்தி நஸ்தார்க்ஷ்யோ அரிஷ்டநேமி: | ஸ்வஸ்தி நோ ப்3ருஹஸ்பதிர்த3தா4து |**

**ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||**

தேவர்களே [தெய்வங்களே]! காதுகளால் நல்லதையே கேட்போமாக. போற்றுதலுக்கு உரிய வர்களே, கண்களால் நல்லதையே பார்ப்போமாக. உறுதியான புலன்களுடன் [திடஅறிவுடன்] நுணுக்கமாக [உங்களைப்] புகழ்ந்து, எவ்வளவு ஆயுள் இறைவனால் கொடுக்கப்பட்டதோ [அதை] அனுபவிப்போமாக. நிகரற்ற புகழுள்ள இந்திரனே எங்களுக்கு [கல்வி கற்பதில்] வெற்றி உண்டாகட்டும்! அனைத்தையும் அறிந்த ஆதவனே, எங்களுக்கு வெற்றி! தடையின்றிச் செல்லும் [பறக்கும்] கருடனே, எங்களுக்கு வெற்றி! பிரஹஸ்பதியே, எங்களுக்கு வெற்றி!

**ஓம்! அமைதி! அமைதி!! அமைதி!!!**



**ஓ இத்யேதத$^3$க்ஷரமித$^3$ம் ஸர்வம், தஸ்யோபவ்யாக்$^2$யானம்,**
**பூ$^4$தம்’ ப$^4$வத்$^3$ ப$^4$விஷ்யதி$^3$தி ஸர்வமோங்கார ஏவ.**
**யச்சான்யத் த்ரிகாலாதீதம்’ தத$^3$ப்யோங்கார ஏவ. (1)**

ஆகம பிரகரணத்தில் உபநிஷத்துக்களும், உபநிஷத மந்திரங்களும், காரிகைகளும் சேர்ந்து வர இருக்கின்றது. முதல் ஆறு மந்திரங்கள் உபநிஷத்தே வர இருக்கின்றது. அதற்குப்பிறகு காரிகை வரும்.

இதில் முதல் இரண்டு உபநிஷத் மந்திரங்கள் **பிரதிக்னா மந்திரங்கள்** ஆகும்.

பிரதிக்னா என்றால் என்ன செய்யப் போகின்றதோ, என்ன செய்யப்படுகின்றதோ அதை எடுத்துக் கூறுவது பிரதிக்னா என்பதாகும்.

அதாவது பிரதிக்னா என்றால் உறுதி கூறுதல், அறிமுகப்படுத்துதல் அல்லது **‘முகவுரை’** என்றும் பொருள் கொள்ளலாம். இதைப்போன்றே நிகமனம் என்றால் **‘முடிவுரை’** என்றும் பொருள்.

இங்கு என்ன பிரதிக்னை செய்யப்படுகின்றது என்றால் ஓம்கார விசாரம் செய்யப்போகின்றோம் என்று முதல் மந்திரமும், ஆத்மவிசாரம் செய்யப் போகின்

றோம் என்று இரண்டாவது மந்திரமும் ஆக, இந்த இரண்டு மந்திரங்களும் அறிமுகப்படுத்துகின்றது.

ஆதாவது, இந்த உபநிஷத்தில் வருகின்ற முதல் இரண்டு மந்திரங்களும், இந்த மாண்டூக்ய உபநிஷதம் எதைப்பற்றி கூற வந்துள்ளது என்பதை அறிமுகப் படுத்தும் விதமான முதல் மந்திரத்தில் ஓங்காரத்தையும், இரண்டாவது மந்திரத்தில் ஆத்மாவைப் பற்றியும் அறிமுகப்படுத்துகின்றது.

ஆனால், உபநிஷதத்துக்குள் நுழைந்தவுடன் மூன்றாவது மந்திரத்தில் இருந்து ஏழாவது மந்திரம் வரை ஆத்ம விசாரம் முதலில் செய்யப்படுகின்றது. பிறகு எட்டாவது மந்திரத்திலிருந்து பனிரெண்டாவது மந்திரம் வரை ஓங்கார விசாரம் இரண்டாவதாகச் செய்யப்படுகின்றது.

இந்த உபநிஷத்தில் முதல் மந்திரம் மற்றொரு கருத்தையும் கூறுகின்றது. அந்த கருத்தைக் காண் பதற்கு முன்பு ஒரு சிறிய விசாரம் செய்துவிட்டு, பிறகு அந்த முதல் மந்திரத்தின் கருத்தைக் காணலாம்.

வேதாந்தத்தின் சாரம் **“பிரம்மம் சத்தியம், ஜகத் மித்யா”** என்ற ஞானத்தைக் கொடுத்தல் ஆகும். அதுமட்டுமல்ல, ஜகத் மித்யா என்ற சொல்லில் இருந்து

இருப்பது பிரம்மம் மட்டுமே, வேறு ஒன்றும் இல்லை என்ற பிரம்மம் ஒன்றை மட்டுமே நிச்சயப்படுத்தி கூறுகின்ற அத்வைதம் ஆகும்.

இதில் இருப்பது பிரம்மம் ஒன்று மட்டுமே என்றால், பிறகு ஏன் நாம் இருமைகளை அனுபவிக் கின்றோம் என்ற சந்தேகம் வருகின்றது.

இந்த உலகத்தை அனுபவிக்கின்றோமே என்றால், அதற்கு பதிலாக சாஸ்திரம் கூறும் விளக்கம் என்னவென்றால், மனிதனின் அறியாமையினால் மட்டுமே இருக்கின்ற ஒரே வஸ்துவான பிரம்மத்தை ஏற்காமல், தோற்ற மாயையினை உண்மை என்று நம்பி இரண்டாகவே அனைத்தையும் பார்க்கப்படுகின்றது.

இதில் ஞானிகள் பார்ப்பது பிரம்மம் ஒன்று என்ற கண்ணோட்டத்தில் அனைத்தையும் ஒன்றாகவும், அஞ்ஞானிகளிகள் பார்ப்பது உலகம் என்ற கண்ணோ ட்டத்தில் அனைத்தையும் பலவாகவும் இருப்பதினால் இந்த வேறுபாடு காணப்படுகின்றது.

இந்த இருவரின் திருஷ்டியில் எது உண்மை என்பதைக் காண வேண்டும். ஒருவன் பிரம்மத்தையே அனைத்திலும் பார்க்கின்றான். மற்றொருவன் இந்த உலகத்தையே அனைத்திலும் பார்கின்றான்.

உதாரணமாக, ஒரு லிங்க வடிவில் ஒரு கல் இருக்கின்றது, அந்த கல்லை காண்கின்ற ஒருவன் இது வெறும் **கல்** என்கின்றான். மற்றொருவன் அந்தக் கல்லை **சிவன்** என்கின்றான்.

இதில் எது சரி?

இதற்கு, ஆதிசங்கரர் இரண்டு பதில்களைக் கூறுகின்றார். இவர்களது இருவரின் கூற்றுப்படியே, அது ஒருவனுக்கு கல்லாகவே இருக்கட்டும், மற்றொருவனுக்கு அது சிவனாகவே இருக்கட்டும். ஆனால், இந்த இருவரின் கண்ணோட்டத்தில் அவர்கள் அடையும் பயன் என்ன என்றுதான் பார்க்கவேண்டும்.

அதன் அடிப்படையில், அதை கல் என்று பார்ப்பவன் சதாகாலமும் கவலைகளுடன் கூடிய துக்கத்தில் இருந்து இருண்ட வாழ்க்கை வாழ் கின்றான். அந்த கல்லையே சிவன் என்று பார்ப்பவன் சதா காலமும், சந்தோசத்தில் ஆனந்த வாழ்க்கை வாழ்கின்றான்.

அதாவது, கல் என்பவனிடத்தில் கோபம், குரோதம், பயம் போன்ற பல துர்குணங்கள் காணப் படுவதினால் அவனால் நிம்மதியான வாழ்க்கை வாழ முடியாது. அதுவே அதை கடவுள் என்பவனிடத்தில்

கோபம், குரோதம், பயம் போன்ற எந்தவிதமான துர் குணங்களும் இன்றி நிம்மதியாக வாழ்கின்றான்.

அதாவது, இருமைகளுடன் கூடிய திருஷ்டியில் இந்த உலகத்தைப் பார்த்தால், அதன் பலன் துக்கம் என்கின்ற சம்ஸாரம். அதையே பிரம்மம் என்ற ஏக திருஷ்டியில் இந்த உலகத்தைப் பார்த்தால் அதன் பலன் ஆனந்தம் என்கின்ற மோக்ஷம்.

இதிலிருந்து எது சரி? என்ற தீர்மாணம் கிடைக் கின்றது.

அடுத்து, பலனை விட்டு, அறிவுப்பூர்வமாக ஆராய்ந்தோமானால், எது நீக்கப்படுகின்றதோ அது பொய்யான திருஷ்டி, எது நீக்கப்படாமல் எப்பொழுதும் இருக்கின்றதோ அது உண்மையான திருஷ்டி.

இதற்கு, உதாரணமாக வேதாந்தத்தில் எப்பொழுதும் கையாளப்படுகின்ற பாம்பு, கயிறுதான் இங்கும் எடுத்துக்கொண்டு, ஒருவனது திருஷ்டியில் அது பாம்பு என்றும், மற்றொருவனது திருஷ்டியில் அது கயிறு என்றும் புலப்படுகின்றது.

இதில் கயிறு என்பவனுக்கு, அது கயிறு என்ற அறிவு இருப்பதினால், அவனுக்கு எந்த விளக்கமும் கொடுக்க வேண்டியதில்லை. அதுவே அந்த கயிற்றை பாம்பு என்று நினைத்துக் கொண்டிருப்பவனுக்கு, அது பாம்பு அல்ல, கயிறுதான் என்று எதாவது ஒரு முறையில் விளக்கம் கொடுத்தாக வேண்டும்.

இதைப்போலவே, இந்த உலகத்தை பிரம்மமாகப் பார்கின்றவனுக்கு ஒரு விளக்கமும் அவசியம் இல்லை. ஆனால், இதை உலகமாகவே பார்க்கின்றவனுக்கு விசாரம் தேவை.

கயிற்றை பாம்பு என்று பார்க்கின்றவனுக்கு ஒரு தீபத்தின் வெளிச்சம் மூலமாக அதை கயிறு என்று நிருபிப்பது போன்று, இதை உலகம் என்று பார்க்கின்றவனுக்கு சாஸ்திரத்தின் மூலமாக அதை பிரம்மம் என்று நிருபிக்க வேண்டியுள்ளது.

இந்த அறியாமை நீங்க வேண்டும் என்பதே உபநிஷதங்களின் முக்கிய நோக்கம்.

கயிறு ஒன்று இருந்ததினால்தான் ஒருவன் அதை உண்மையான பாம்பாக கற்பிதம் செய்துக் கொண்டான்.

அங்கு கயிறு இல்லையென்றால், அறியாமை யினால், அதை பாம்பாக கற்பிதம் செய்துக்கொள்ள வாய்ப்பே இல்லை.

மேலும், அவன் பாம்பு என்ற ஒன்று அந்த அதிர்ஷ்டானமான கயிற்றின் உருவத்தில் இருக்கி ன்றதை பார்க்கின்ற பொழுது, அவனுக்கு உண்மையான கயிறு மறைந்து அவனது காட்சிக்கு அது பாம்பாகத் தெரிகின்றது.

இதுபோல, பிரம்மம் என்ற ஒன்று இருப்பதி னால்தான் அதை அறியாமல் உண்மையான உலகமாக கற்பிதம் செய்துக்கொள்கின்றான்.

பிரம்மம் என்ற ஒன்று இல்லையென்றால், அறியாமையினால், அதை உலகமாகக் கற்பிதம் செய்துக்கொள்ள வாய்ப்பே இல்லை.

அறியாமையினால் பார்க்கின்ற பொழுது, அதன் அதிர்ஷ்டானத்தை சாமன்யமாகப் பார்க்கின்றான்.

அதனால், தவறான இந்த புரிதலில் இருந்து, சரியான ஞானத்தை எப்படிப் பெறுவது?

எது தவறாக புரிந்துக் கொள்ளப்பட்டதோ, அந்த கயிற்றிடமிருந்துதான் விசாரத்தை தொடங்கவேண்டும். அதுப்போல, இங்கு இந்த உலகத்தை தவறாகப் புரிந்துக் கொண்டிருப்பதினால் இந்த உலகத்தினிட மிருந்துதான் விசாரத்தை தொடங்க வேண்டும்.

இதற்கு ஒரு நியதி இருக்கின்றது. அதிர்ஷ்டானம் என்ற ஒன்று இல்லாமல், தவறு என்ற ஒன்று நடக்காது.

**“நிரதிஷ்டான பிரம: ந பவதி”**

ஆதாரம் இல்லாமல் தவறை செய்ய முடியாது. கயிறு இல்லாமல் அங்கு பாம்பு என்ற தவறு நடக்காது.

ஒரு தவறு நடக்கின்றது என்றால், அதற்குக் கீழ் ஆதாரம் ஒன்று இருந்தாக வேண்டும். அதாவது, கிளிஞ்சள் எனற ஒன்று இல்லாமல், அதை வெள்ளிக் காசு என்ற கற்பிதம் செய்ய முடியாது.

அதிர்ஷ்டானம், அத்தியாசம் ஆகிய இந்த இரண்டையும் பிரிக்கவே முடியாது.

அதாவது, கயிற்றையும், பாம்பையும் பிரிக்கவே முடியாது. களிமண்ணையும், பானையையும் பிரிக்கவே முடியாது. தங்கத்தையும், நகைகளையும் பிரித்துப் பார்க்கவே முடியாது.

ஆகவே, அறியாமை உண்டாகக்காரணமாக இருந்த ஆதார வஸ்து ஒன்றை அறியாததினால், அந்த அறியாமை (கயிறை பாம்பாக நினைத்து) நீடிக்கின்றது. அதுவே, அதை விசாரம் செய்து அதன் உண்மைத்தன்மையைத் தெரிந்துக் கொண்டால், அந்த அறியாமை நீங்கி அதன் உண்மைத் தன்மை (பாம்பு அல்ல கயிறு) என்ற அறிவு உண்டாகும்.

அதுபோல, அறியாமையினால், தவறான இந்த உலகத்தின் மீது உள்ள நம்முடைய (பிரம்மத்தை உலகமாக நினைக்கின்ற) பார்வை மாற வேண்டுமானால், அதை விசாரம் செய்து, அதன் அதிர்ஷ்டானமான பிரம்மத்தை தெரிந்துக் கொண்டால், அறியாமை நீங்கி அதன் உண்மைத் தன்மை (இது உலகம் அல்ல பிரம்மம்) என்ற அறிவு (ஞானம்) உண்டாகும்.

ஆகவே, இருப்பது பிரம்மம் மட்டுமே, அந்த பிரம்மத்தின் மீது இந்த உலகத்தை ஏற்றி வைத்துக்

கொண்டு, சம்ஸார சக்கரத்தில் சிக்கிக் கொண்டு துயரத்தை அடைகின்றோம்.

எனவே, உண்மையாக உள்ள கயிற்றை அறிந்துக் கொள்ள, அதை பாம்பாக நினைத்துக் கொண்டிருக்கின்ற இடத்தை விட்டு, விட்டு வேறு ஒரு இடத்திற்குச் சென்று அங்கு கயிறு உள்ளது என்று எப்படி அறிந்துக் கொள்ள முடியாதோ?

அதுப்போல, பிரம்மத்தை அறிய வேண்டு மானால், இந்த உலகத்தை விட்டு, விட்டு வேறு உலகம் சென்று தேடினாலும் அதன் உண்மையை அறிய முடியாது.

அதாவது, எங்கு பொய் கற்பிக்கப்பட்டதோ, அங்கேயே உண்மையும் ஒழிந்துள்ளது.

எனவே, இந்த உலகத்தை விசாரம் செய்து, இந்த உலகத்திற்கு ஆதாரமான பிரம்மத்தை அறிய முடியும். அதை விட்டு, விட்டு, இந்த உலகத்தையே துறந்து நான் பிரம்மத்தை அறியப் போகின்றேன் என்றால் அதைவிட மோசமான அறியாமை வேறு ஒன்று கிடையவே கிடையாது.

ஆகவே, பிரம்மத்தை அறிந்துக் கொள்ள இந்த உலகத்தில் எந்தப் பகுதியிலிருந்து விசாரத்தை தொடங்குவது என்றால், இமயமலைச் சாரலில் இருந்தோ, அல்லது அண்டார்டிகாவின் ஆரம்பத்தி லிருந்தோ, அல்லது அண்டவெளியில் இருந்தோ அந்த பிரம்மத்தை அறிய முடியாது. மிகவும் எளிதாக இந்த உலகத்தில் (பிரபஞ்சத்தில்) ஒரு துகளாக இருக்கின்ற நம்மிடையே இருந்துதான் இந்த விசாரத்தை தொடங்க வேண்டும்.

எனவே, இந்த ஜகத்தினை விசாரம் செய்வது என்பது, நம்மிடையே தொடங்கப்படவேண்டும். அதன் தொடக்கமாக உபதேசிக்க வந்த இந்த மாண்டூக்ய உபநிஷதம் ஓங்காரத்தை பற்றியும், ஆத்மாவைப் பற்றியும் விசாரம் செய்ய வருகின்றது.

அப்படியானால், ஓங்காரத்தை விசாரம் செய்து எப்படி பிரம்மத்தை அறிந்து கொள்ள முடியும்? ஜகத்தை (உலகத்தை) விசாரம் செய்து அல்லவா பிரம்மத்தை அறிய முடியும்! என்ற சந்தேகம் வருகின்றது.

அப்படியானால், இந்த உபநிஷதம் எதற்காக ஓங்கார விசாரத்தை செய்கின்றது என்றால், ஓங்காரமும்,

இந்த உலகமும் ஒன்று என்ற உண்மையையும் நமக்கு உணர்த்துவதற்காக ஆகும்.

**“ஓம் இதம் சர்வம்”**

என்று இந்த பிரபஞ்சமும் (உலகமும்), ஓங்காரமும் ஒன்று என்பதிலேயே இதன் முதல் மந்திரம் தொடங்குகின்றது.

அதனால், ஓங்கார விசாரம் செய்வதும், இந்த உலகத்தை விசாரம் செய்வதும் ஒன்று.

**ஓம் = ஜகத்**

அதிர்ஷ்டானமான பிரம்மத்தை தெரிந்து கொள்ள அதன் மீது ஏற்றி வைக்கப்பட்டுள்ள ஜகத்தை விசாரம் செய்வதை விட வேறு மார்க்கம் கிடையாது. ஆனால், உபநிஷதம் ஓங்கார விசாரம் செய்கின்றது. இதிலிருந்து ஓங்காரமும், இந்த ஜகத்தும் ஒன்று என்பதினால், ஓங்காரத்தை விசாரம் செய்து, அதன் அதிர்ஷ்டானமான பிரம்மத்தை அறிய முடியும்.

ஓம் என்ற அக்ஷரம் எப்படி ஜகத் ஆகும்?

ஆனால், இந்த மாண்டூக்ய உபநிஷதமோ தன்னுடைய முதல் மந்திரத்திலேயே **“ஓ இத்யேத தக்ஷரமிதம் ஸர்வம்”**, அதாவது அனைத்தும் **“ஓம்”** என்று ஓங்காரத்தையே இந்த ஜகத் (உலகம்) என்று ஆரம்பிக்கின்றது.

இதை எதன் அடிப்படையில் என்று உபநிஷதம் கூறவில்லை. ஆனால், ஸ்ரீ சங்கரரோ தனது பாஸ்யத்தில் இதற்கான விளக்கத்தை மிக அருமையாக எடுத்துரைக்கின்றார்.

ஜகத் என்பது இந்த பிரபஞ்சம், இந்த பிரபஞ்சம் இரண்டு விதத்தில் இருக்கின்றது. ஒன்று பதார்த்த பிரபஞ்சம், இரண்டாவது பத பிரபஞ்சம் என்று இரண்டாக பிரிக்கின்றோம்.

பதார்த்தம் என்றால், நாம் காணக்கூடிய அனைத்து பிரபஞ்சப் பொருட்களை பதார்த்தம் என்று பெயர். இந்த உலகத்தில் எவ்வளவோ பதார்த்தங்கள் இருக்கின்றன என்றால், எண்ணிக்கையில் அடங்காத அளவிற்கு அனேக பதார்த்தங்கள் இருக்கின்றன்.

சிலர் உண்ணும் தின்பண்டங்களை பதார்த்தம் என்று கூறுவர். ஆனால், அனைத்து பொருட்களையுமே பதார்த்தம் என்றே சாஸ்திரம் குறிப்பிடுகின்றது.

பொதுவாக பதம் என்றால் வார்த்தை அல்லது சொற்கள் என்பது பொருள். ஒவ்வொரு பதார்த் தத்திற்கும் ஒவ்வொரு பெயர் வைக்கப்பட்டுள்ளன.

எனவே, எவ்வளவு பதார்த்தம் இருக்கின்றதோ, அவ்வளவு பதங்கள் (சொற்கள்) இருக்கின்றன.

புதிய பொருட்கள் கண்டு பிடிக்கப்பட்டவுடன் அதற்கு ஒரு புதிய பதம் (பெயர் சொற்கள்) வைக்கப் படும். உதாரணம் செல்போன், டெலிவிசன் என்று இந்த நூற்றாண்டில் பலப் பெயர் வைக்கப்பட்டுள்ளதை நாம் அறிவோம்.

அதாவது, எவ்வளவு பதார்த்தங்கள் இருக்கின் றனவோ, அவ்வளவு பதப்பிரபஞ்சமும் இருக்கின்றது.

பதத்திற்கும், பதார்த்தத்திற்கும் உள்ள சம்பந்தம் என்ன என்றால், பிரசித்தமாக பேசப்படுகின்ற சம்பந்தம் **'நாம, நாமி சம்பந்த:'** என்பதாகும்.

அதாவது, நாம என்றால் பெயர், நாமி என்றால் அந்த பெயரை கொண்ட பொருள் என்பதாகும்.

**“அபிதான அபிதேய சம்பந்த:”** என்றும் சாஸ்திரத்தில் இதை கூறுவார்கள்.

அபிதானம் என்றால் பெயர். அபிதேயம் என்றால் பெயர் வைக்கப்பட்டுள்ளது என்று அறிய வேண்டும்.

இதிலிருந்து இரண்டும் ஒன்றா? என்றால், இல்லை, இரண்டுக்கும் வேற்றுமை இருக்கின்றது.

அதாவது ‘நெருப்பு’ என்றால் வாய் சுட்டு விடுமா? என்பார்கள்.

அதாவது, நம்முடைய அனுபவத்தில் பெயரை கூறுவதினால், அந்த பெயரை உடைய பொருளை அனுபவிக்க முடியாது. அதாவது சர்க்கரை என்றவுடன் நம்முடை நாக்கு இனிப்பை உணராது. அதை சுவைத்தால்தான் உணரமுடியும். ஆகவே இரண்டும் வேறு, வேறாக இருக்கின்றது.

சமஸ்கிருதத்தில் **“மண்டூக:”** என்றால் ***தவளை*** என்ற ஒரு பொருள் உண்டு.

தவளை எப்படித் தாவித்தாவி நடக்கின்றதோ, அதுப்போல, இந்த உபநிஷத்தில் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு தாவி, தாவிச் சென்று உபதேசிக்கப்படுகின்றது. அதனால் இதை ‘**மாண்டூக்ய உபநிஷதம்**’ என்று கூறுகின்றனர்.

அதனால், இங்கு சொல்லும், சொல்லினால் குறிப்பிடப்படுகின்ற பொருளும் ஒன்று (ஐக்கியம்) என்று குறிப்பிடப்போகின்றது. அதாவது, பதமும், பதார்த்தமும் ஒன்று என்று குறிப்பிடுகின்றது இந்த உபநிஷதம்.

அதாவது, நம் அனுபவத்திற்கு இல்லாத ஒன்றை உண்மையில் இருக்கின்றது என்பதை நிருபிப்பது மட்டுமே உபநிஷதங்களின் உன்னதமான நோக்கம்.

அதாவது நெருப்பும், நெருப்பு என்ற சொல்லும், சர்க்கரை என்ற சொல்லும், சர்க்கரையும், மற்றும் ஓங்காரமும், இந்த உலகமும் ஒன்று என்று விசாரித்து, அதை நிரூபிக்கப்போகின்றது இந்த உபநிஷதம்.

ஞானிகளைப் பொருத்தவரையில் இந்த உலகம் என்பது ஒரு **“சத்தம்”** என்ற அறிவுடன் இருப்பார்கள்.

ஆனால், அஞ்ஞானிகளைப் பொருத்தவரை இந்த உலகம் **“உண்மை”** என்ற அறியாமையில் இருப்பார்கள்.

சாஸ்திரம் இந்த அனைத்து பதார்த்தங்களையும் (பொருட்களையும்) பதமாக (வெறும் வார்த்தை அல்லது சொல்) மாற்றி, பதார்த்தமும், பதமும் ஐக்கியம் என்று அறிவுறுத்தப்போகின்றது.

எப்படி?

காரிய காரண தத்துவத்திற்கு செல்லலாம்.

உதாரணமாக,

ஒரு கிலோ தங்கத்தை எடுத்துக் கொள்ளலாம். இதனுடன் செம்பு சேர்த்து நகை செய்வதாக வைத்துக் கொண்டாலும், இந்த இரண்டு பொருட்களும் சேர்ந்து ஒரு கிலோ தங்கத்திற்குள் அடங்குவதாக வைத்துக் கொள்வோம்.

அதிலிருந்து 20 விதமான வகை, வகையான நகைகள் செய்யப்படுகின்றது. இந்த நகைகளுக்கு மூலம் தங்கம் மட்டுமே ஆகும்.

அதாவது, நகைகள் செய்யத் தொடங்கும் முன்பு, ஒரு கிலோ தங்கம் என்ற ஒரே ஒரு மூலப்பொருள் மட்டுமே இருந்தது, அதற்குப் பிறகு 20 விதமான ஆபரணங்கள் உருவாக்கப்பட்டு விட்டது.

இப்பொழுது, இந்த 20 விதமான நகைகளுக்கு 20 விதமான சொற்கள் உண்டாகிவிட்டன. அதாவது, ஆரம், நெக்லஸ், செயின், வளையல், மோதிரம், கம்மல் என்று புதிய பதங்கள் (பெயர்கள்) வந்து விட்டன.

ஒரு பதமான தங்கம் என்ற பெயரில் ஒரே ஒரு பதார்த்தம் மட்டுமே இருந்தது. அதிலிருந்து 20 விதமான பதங்களுடன் (பெயருடன்) கூடிய 20 பதார்த்தங்கள் (பொருட்கள்) வந்து விட்டன.

இங்கு சிறிது சிந்தித்துப் பார்த்தோமானால், அந்த ஒரே ஒரு கிலோ அளவும், பெயரும் கொண்ட தங்கம் என்ற ஒரு பதார்த்தம் தற்பொழுது, 20 விதமான பெயர்களையும், 20 விதமான

உருவங்களையும், கொண்ட அதே ஒரு கிலோ எடையில் இருப்பதை அறிய முடிகின்றது அல்லவா?

அப்பொழுது, இதிலிருந்து நமக்குத் தெரிவது, நிறைய பொருட்கள் (பதார்த்தங்கள்) வந்தது போலவும், நிறைய பெயர்கள் இருப்பதுப் போலவும் தெரிகின்றது. ஆனால், உண்மையில் ஒரே பதார்த்தமான ஒரு கிலோ தங்கம் என்ற ஒரே பெயரை உடைய ஒரே பதார்த்தம் மட்டுமே இருக்கின்றது என்பதே உண்மை ஆகும்.

ஆக, காரண, காரிய நியதிப்படி, காரணம் என்ற தங்கத்துடன் எதைச் சேர்த்தோம் என்று பார்த்தால், சில ரூபங்கள் (உருவங்கள்), சில நாமங்கள் (பெயர்கள்) சேர்க்கப்பட்டுள்ளது.

காரணம் + நாமம் + ரூபம் = **காரியம்**

(தங்க உலோகம்) + (தங்கம்) + (நகைகள்) = **(மோதிரம், கம்மல், செயின்...)**.

“ஒரு பதார்த்தமானது காரியமாக காட்சிய ளித்துக் கொண்டிருக்கும் பொழுது, அங்கு பல விதமான பதங்கள் உற்பத்தியாகின்றன. அதில் பதத்திற்கும், பதார்த்தத் திற்கும் வேறுபாடு கிடையாது”.

இங்கு நம்முடைய அறியாமை என்னவென்றால், 20 பதார்த்தங்களைப் பார்த்துவிட்டு, 20 பெயர்களையும் அறிந்துக் கொண்டு, அனைட்த்தும் வேறு, வேறு என்று நினைத்துக் கொள்கின்றோம். ஆனால், இருப்பது ஒரே பதார்த்தமான தங்கம் என்ற பெயருடன் கூடிய ஒன்று மட்டுமே ஆகும். அதனால், பதமும், பதார்த்தமும் ஒன்று (ஐக்கியம்) என்று நிரூபிக்கப்பட்டுள்ளது.

ஒரு பொருள் காரியமாக காட்சியளித்துக் கொண்டிருந்தாலும், அது வெறும் பெயர்கள் சூட்டப்பட்ட **‘சப்தம்’** மாத்திரமே என்ற உண்மை விளங்குகின்றது.

காரியம் = **சப்தம் (வெறும் சொற்கள் மாத்திரமே).** இதைத்தான், **“வாக்ஷாரம்பனம் விகாரோ நாமதேயம்” -** சாந்தோக்ய உபநிஷதம்.

ஒரு பொருள் படைக்கப்பட்டது என்றால் அது வார்த்தையினால் (பெயர்கள்) மட்டுமே என்பதை உபநிஷதம் உறுதி செய்கின்றது.

இந்த அகில பிரபஞ்சத்தையும் சாஸ்திரம் என்ன கூறுகின்றது என்றால், இது பிரம்மத்தினுடைய காரியம் என்கின்றது.

இந்த உலகம் பிரம்மத்தினடமிருந்து வந்தது என்கின்றது. பிரம்மத்திடமிருந்து இந்த பிரபஞ்சம் தோன்றியுள்ளது என்று அனைத்து உபநிஷதங்களுமே வலியுறுத்துகின்றன. பிரம்மத்தை காரணமாகவும், இந்த உலகத்தை காரியமாகவும் கூறுகின்றது.

எனவே பிரம்மத்தினுடைய காரியம் என்ப தினால், காரியம் என்பது வெறும் சப்தம் மாத்திரமே என்று ஏற்கனவே நிருபிக்கப்படுள்ளதால், பிரம்மத் தினுடைய **“ஓம்”** என்ற பதமே இந்த பிரபஞ்சமாக (சப்தமாக) இருக்கின்றது.

குறிப்பு:-

=======

(இந்த தங்கம் என்ற ஒன்று மட்டுமே எப்படி பல வடிவங்களிலும், பல பெயர்களிலும் நம்மிடையே அறியப்படுகின்றதோ, அதுப்போல, இருக்கின்ற ஒரே வஸ்துவான பிரம்மம் பல வடிவங்களிலும், பல பெயர்களிலும் அறியப்படுகின்றது. ஆனால், இந்த ஜகத்தும், பிரம்மமும் ஒன்று (ஐக்கியம்) என்பதே இங்கு **“ஞானம்”** என்று அழைக்கப்படுகின்றது.

இந்த ஜகத்திலுள்ள ஜீவனும், பிரம்மமும் ஒன்று என்பதில் இனி சந்தேகம் இருக்க வாய்ப்பேயில்லை.)

அடுத்தது, இந்தப் பதப்பிரபஞ்சத்தை எடுத்துக் கொண்டு கவனித்தோமானால், ஒரு தங்கத்தை வைத்துக்கொண்டு வித, விதமான நகைகள், ஒரு களிமண்ணை வைத்துக் கொண்டு வித, விதமான மட்பாண்டங்கள் என்று வடித்து, அவைகளுக்கு நாமங்களை (பெயர்களை) கொடுத்து விடுகின்றோம்.

இப்படி விதவிதமான பதப்பிரபஞ்சத்திற்கு உபாதான காரணம் எது என்றால், சாஸ்திரம் விளக்கம் அளிக்கின்றது **"அ"** - என்ற அகாரம் உபாதான காரணம்.

இந்த **'அ'** என்ற சொல்லில் இருந்தே விதவிதமான சொற்கள் உண்டாகின்றன என்று இலக்கணமும் சுட்டிக்காட்டுகின்றது.

இதையே தமிழ்ப் புலவர் திருவள்ளுவரும்,

**அகர முதல எழுத்தெல்லாம்**
**ஆதிபகவன் முதற்றே உலகு.**

என்று தன்னுடைய குறட்பாவின் வாயிலாகவும் தெளிவு படுத்துகின்றார்.

பொதுவாக வாயைத் திறந்து வார்த்தைகளை உட்சரிக்க தொடங்கவேண்டுமானால், அது **'அ'** என்று ஆரம்பித்து, வாயை முடி வார்த்தைகளை முடிக்க வேண்டுமானால் **'ம்'** என்ற சப்தத்துடன் மட்டுமே ஒரு சொல்லை முடிக்கின்றோம்.

உதாரணமாக, வணக்கம், வந்தனம், வந்தே மாதரம் என்று கூறிக்கொண்டே போகலாம்.

இதில், சொல்லில் தொடக்கமாக **'அ'** என்ற அக்ஷரமும், முடிவாக **'ம்'** என்ற அக்ஷரமும், இந்த இரண்டிற்கும் இடையில் உச்சரிக்கப்படுகின்ற பெரும் பாலான சொற்கள் **'உ'** என்ற அக்ஷரமாகவும் நடை முறையில் உச்சரிக்கப்படுகின்றன.

இந்த **'அ, உ, ம்'** என்ற மூன்று அக்ஷரங்களும் சேர்ந்து **"ஓம்"** என்ற *அக்ஷரம்* கிடைக்கின்றது.

**அ+உ+ம் = ஓம்.**

அனைத்து பதப்பிரபஞ்சத்திற்கும் உபாதானக் காரணம் **“ஓம்”** என்ற சப்தம் ஆகும்.

ஓம் = **பதப்பிரபஞ்சம் ஆகும்.**

பதப்பிரபஞ்சம் = பதார்த்தப்பிரபஞ்சம் ஒன்று என்பதினால், **ஓம்** = பதார்த்தப்பிரபஞ்சம் (இந்த உலகம்) ஆகும்.

**ஓமும்**, இந்த **உலகமும்** ஒன்றுதான்.

உபாதனக் காரணமும், ஓம் என்ற அக்ஷரமும் ஐக்கியம். ஆகவே, ஓம் விசாரம் செய்தாலும், பதார்த்தப் பிரபஞ்சம் விசாரம் செய்தாலும் ஒன்றுதான் என்ற விளக்கம் கிடைக்கின்றது.

(1) **ஓம் இத்யேததக்ஷரமிதம் ஸர்வம், தஸ்யோபவ்யாக்யானம்,**
**பூதம் பவத் பவிஷ்யதிதி ஸர்வமோங்கார ஏவ |**
**யச்சான்யத் த்ரிகாலாதீதம் ததப்யோங்கார ஏவ ||**

**ஓம்** என்ற இந்த அக்ஷரம், இவைகள் அனைத்தும் இந்த ஓங்காரத்தினுடையது. இதன் விளக்கம் ஆரம்பிக் கப்பட்டு விட்டது. ஓமெனுமிந்த அழியாததே இவை எல்லாம். அதன் விளக்கமாவதிது.

ஆனது, ஆகியிருப்பது, ஆகப்போவது என்ற எல்லாமே ஓங்காரம்தான். இவையன்றி முக்காலங் களைக் கடந்தததுவும் ஓங்காரமே.

**பதவுரை:**

------------

ஒமிதி - ஓம் என்ற; ஏத3து - இந்தஒரு; அக்ஷரம் - அழிவற்ற ஒன்று [சொல்]; இத3ம் ஸர்வம் - இது எல்லாம். தஸ்ய - அதன்; உபவ்யாக்2யானம் - விளக்கமாவது; பூ4தம் - ஆனது; ப4வது3 - ஆகிவருவது; ப4விஷ்யது3 - ஆகப்போவது; இதி ஸர்வம் - இது எல்லாம்; ஓங்கார ஏவ - ஓங்காரம்தான்.

த்ரிகாலாதீதம் - [இறந்த, நிகழ், எதிர்] மூன்று காலங்களைக் கடந்த [அப்பாற்பட்ட]; யச்சான்யது - மற்ற எதுவாகிலும்; தது3 அபி ஓங்கார ஏவ - அதுவும் ஓங்காரம்தான்.

**விளக்கம்:**

------------

இந்த முதல் சுலோகத்தின் வாயிலாக ஓம் என்னும் பிரணவ மந்திரம் விளக்கப்படுகிறது.

எழுத்தையும், சொல்லையும், பேச்சையும் வட மொழியில் **அக்ஷரம்** என்று சொல்கிறார்கள். **ஷரம்** என்றால் *அழிவது* என்று பொருள். எனவே, **அக்ஷரம்** என்றால் *அழியாதது* என்றே பொருள் கொள்ள வேண்டும்.

ஏன்? மனிதன் அழியலாம், ஆனால் அவனது சொல் அழிவதில்லை.

பெரியோர் சொல்லிவைத்த சொற்கள் இன்றும் அழியாமல் நம் நினைவில் நிற்கின்றன. ஒரு மொழி அழிந்தாலும் ஒவ்வொரு மொழியிலும் உள்ள சொற்கள் அழிவதில்லை. ஆகையால் சொல் என்பது அக்ஷரம், அதாவது அழிவற்றது என்று ஆகிறது. எனவே ஓம் எனும் அழிவற்ற இது என்று மாண்டூக்ய உபநிஷத்து துவங்குகிறது.

இது எல்லாமே என்றால், நம்மால் அறிய முடியும், முடியாத எல்லாமே என்று விளக்கமாகிறது. இது எல்லாமே ஓம் தான் என்று சொன்னபிறகு அதன் பொருளை விவரிக்கிறது.

சென்றவை, இருப்பவை, வருபவை எல்லாம் ஓங்காரமே. ஆனது, ஆகிக்கொண்டிருப்பது, ஆகப்

போவது எல்லாமே ஓங்காரம்தான் என்று அழுத்திச் சொல்கிறது.

பெரும் வெடிப்பு [Big Bang} நிகழ்ந்தபின் இந்த அண்டம் தோன்றியது என்கிறார்கள் அறிவாளிகள். அப்படித் தோன்றிய அண்டம், பெரும் மாறுதலை அடைந்துகொண்டிருக்கும் அண்டம், இனி மாறப் போகும் அண்டம் எல்லாமே ஓங்காரம்தான் என்கிறது.

மேலும் விளக்க, நம்மால் காண முடிவது மட்டும் அல்ல, காண இயலாத, உணர இயலாத மூன்று காலத்திலும் நிகழ்ந்த, நிகழும், நிகழப்போகும் மற்றவை எல்லாமே ஓங்காரம்தான் என்னும்போது…

ஒரு சொல்லானது எல்லாமாக எப்படி இருக்க இயலும் என்ற எண்ணம் எழத்தான் செய்யும்.

அப்படியானால், அந்தச் சொல்லான ஓம் என்ன என்று அறிய ஆவல் கூடுமல்லவா? அதற்கு விளக்கம் அடுத்த சுலோகத்தில் பிறக்கிறது.

அதற்குமுன் முக்காலத்திற்கும் அப்பாற்பட்ட, சென்றவை (கடந்த) என்ற குறிப்பீட்டைப் பார்ப்போம்.

நமக்கு மிகவும் அருகில் உள்ள நட்சத்திரம் [விண்மீன்] பிராக்சிமா சென்டாரி [Proxima Centauri] நமது பூமியிலிருந்து நாலேகால் ஒளிஆண்டு தூரத்தில் இருக்கிறது. அதை நாம் பார்க்கும் போது, நாலேகால் ஆண்டுகளுக்கு முன் அது இருப்பதைத்தான் இன்று நாம் காண்கிறோம்.

எனவே நாம் காண்பது இறந்தகாலத்தைத்தான்.

அதைப்போல மிகவும் தள்ளி இருக்கும் மற்ற விண்வெளி மண்டலங்கள் இன்னும் பல நூறு/ஆயிரம் ஒளி ஆண்டுகள் தூரத்தில் உள்ளன.

எனவே அவற்றை நமது தொலைநோக்கிகள் [telescopes] காணும்போது, அவ்வளவு பழைய காலத்தில் இருக்கும் ஒன்றையே நாம் காண்கிறோம்.

மேலும் கருந்துளைகளில் [black-holes] காலமே வளைக்கப்பட்டு விடுகிறது என்றும் விண்வெளி வல்லுனர்கள் கூறுகிறார்கள்.

இந்தக் கூற்று, முக்காலத்திற்கும் அப்பாற்பட்ட, கடந்த ஒன்று நிகழக்கூடும், நிகழுகிறது என்பதுதானே!

இதை நமது முனிவர்கள் கேட்டுணர்ந்து இருப்பதை வானியல் உறுதிசெய்கிறது.

எந்த ஒன்று முக்காலத்திற்கும் கடந்து இருக்கின்றதோ, அதுவும் ஓங்காரமே என்று கூறுகின்றது. இந்த முக்காலத்தையும் கடந்து இருப்பது இரண்டு தத்துவம் ஆகும். அதில் ஒன்று மாயை, மற்றொன்று பிரம்மம் ஆகும்.

இந்த மந்திரத்திலும் மாயை குறிப்பிடப் படுகின்றது. எப்படி, மாயை முக்காலத்தையும் கடந்தது என்றால், கால, தேசமே இந்த மாயையிலிருந்து வருகின்றது. மாயையிலிருந்து தோன்றியது காலம் மற்றும் தேசம் ஆகும். எது மாயையிலிருந்து தோன்றியதோ, அது காரணத்தை ஒன்றும் செய்ய முடியாது. அதாவது, மாயையிலிருந்து தோன்றிய காலத்தைக் கடந்து இந்த மாயையானது இருக்கின்றது.

ஆகவே, காலம் என்று கூறினால், அது மாயையிலிருந்து வந்தது என்பது புலனாகின்றது. ஆகவே, மாயா தத்துவம் காலத்தைக் கடந்தது என்பது அறிய முடிகின்றது.

இந்த மாயை தனித்து செயல்பட முடியாது. காரணம் அது ஈஸ்வரனுடன் சேர்ந்தது. ஆகவே

மாயை என்பதும் ஈஸ்வரன் என்பதினால், இந்த ஈஸ்வரனும் ஓங்காரம்தான் என்பதை உறுதிப்படுத்த முடிகின்றது.

ஆனால், அந்த ஈஸ்வரன் மாயையினால் மறைக்கப்படுள்ளார். அவரை மாயைக் கடந்து பார்க்க விரும்பினால், இந்த உலகத்தை மீண்டும் இரண்டாகப் பிரித்துப்பார்க்க வேண்டும்.

இந்த உலகத்தை வேறு ஒரு கோணத்தில் இரண்டாகப் பிரிக்கலாம். ஒன்று காரியப்பிரபஞ்சம், மற்றொன்று காரணப்பிரபஞ்சம் என்பதாகும்.

இதில் காரியப்பிரபஞ்சம் என்றால் வெளித் தோற்றத்திற்கு வந்த உலகம். காரணப்பிரபஞ்சம் என்றால், இதற்குக் காரணமாக இருக்கின்ற **மாயா தத்துவம்** ஆகும்.

காரியப்பிரபஞ்சமும், காரணப்பிரபஞ்சமும் இரண்டும் ஓங்காரம்தான். இதில் **மாயை** என்றாலும், **காரணப்பிரபஞ்சம்** என்றாலும் ஒன்றுதான்.

ஆகவே, ஓம் என்றால் காரியப் பிரபஞ்சத்தையும், காரணப் பிரபஞ்சத்தையும் குறிக்கும் தத்துவம் ஆகும்.

அனைத்து பதார்த்தங்களும் ஒரு பதத்திற்குள் கொண்டுவந்து, அந்த பதத்திற்கும் மூலம் ஓங்காரம் என்று அறிந்து கொள்ளப்பட்டது. ஆகவே ஓங்காரமே அனைத்தும் ஆகும். எனவே இந்த உலகம் என்பது வெறும் சப்தம் மட்டுமே என்பதாகும்.

இப்படிப்பட்ட சப்தமான ஓங்காரம், அசப்தமான (மௌனமான) பிரம்மத்தின் மீது ஏற்றி வைக்கப் பட்டுள்ளது. இதைப்பற்றி இனி விரிவாக இந்த உபநிஷத்தின் 8 - வது மந்திரத்தில் அறியலாம்

(குறிப்பு:- ஏற்கனவே கூறியதைப் போன்று, மந்திரங்கள் தாவித்தாவி செல்வதால் இதை மாண்டூக்ய உபநிஷதம் என்றும் அழைக்கின்றனர்.)

**(2) ஸர்வக்ம் ஹ்யேதத் ப்ரஹ்ம, அயமாத்மா ப்ரஹ்ம,ஸோ(அ)யமாத்மா சதுஷ்பாத்.**

எல்லாமே அந்தப் பரம்பொருள்தான். இந்த ஆத்மாவும் பரம்பொருள்தான். இந்த ஆத்மா நான்கு பரிமாணங்களை உடையது.

இந்த இரண்டாவது மந்திரத்தில் பதம் என்பது ஒன்று கிடையாது, இருப்பது பதார்த்தம் மட்டுமே என்று முதல் மந்திரத்தில் கூறியதற்கு எதிராக கூறப் படுகின்றது.

அப்பொழுது வெறும் சப்தம் மட்டுமே இருக்கின்றது என்று கூறிவிட்டு, இப்பொழுது, சப்தம் என்பது எப்படி ஒரு பொருளாகும், ஆகவே இருக்கின்ற ஒரே பொருள் பதார்த்தம் மட்டுமே என்று இந்த மந்திரத்தில் கூறப் படுகின்றது.

அதாவது, பதத்தை, பதார்த்தத்துக்குள் ஐக்கியப் படுத்தி விடப்போகின்றோம். எல்லா சப்தத்தையும் பதார்த்தத்திற்குள் ஒடுக்கி விடுகின்றோம். இருப்பது பதார்த்தப் பிரபஞ்சம் மட்டுமே என்று இனி விசாரம் செய்யப்படுகின்றது.

பதம் என்பது நாமம், பதார்த்தம் என்பது ரூபம் என்று ஏற்கனவே அறிந்துள்ளோம்.

அந்த அரூபமான பிரம்மத்திடம் ரூபங்கள் ஏற்றி வைக்கப்பட்டுள்ளது. அதாவது அனைத்து ரூபங்களை கொண்ட பதார்த்தப் பிரபஞ்சம் ரூபமற்ற பிரம்மத்தின் மீது ஏற்றி வைக்கப்பட்டுள்ளது என்று விசாரம் செய்யப்படுகின்றது.

இந்த விசாரத்தை இரண்டவது மந்திரத்தில் ஆரம்பித்து, ஏழாவது மந்திரம் வரை நடை பெறப் போகின்றது. அடுத்து எட்டாவது மந்திரத்திலிருந்து மீண்டும் ஓங்கார விசாரத்தை தொடங்குகின்றது.

இவ்வாறு இந்த உபநிஷதம் தாவித்தாவி விஷயங்களைக் கொடுப்பதற்குக் காரணமும் உள்ளது.

பதார்த்தமும், பதமும் முழுமையாக ஒன்றுதான் என்று நிரூபிக்க இந்த உபநிஷதம் விரும்புகின்றது. அதாவது நாமத்திற்கும், ரூபத்திற்கும் ஐக்கியத்தை கொடுக்கின்றது.

அதனால், இதில் ஏதாவது ஒன்றை எடுத்துக் கொண்டும் பிரம்மத்தை அறியலாம்.

உதாரணமாக,

தங்கத்தை எடுத்து வளையல் செய்தால், அதற்கு ஒரு ரூபம் வந்து விடுகின்றது. அப்படி ஒரு ரூபம் (உருவம்) வந்தால் உடனடியாக அதற்கு நாமமும் (பெயர்) வந்தாக வேண்டும். அதாவது உருளையான வடிவம் கொடுத்தவுடன், அதற்கு வளையல் என்று பெயர் சூட்டப்படுகின்றது.

இப்படி செய்யப்பட்ட உருளையான வளையலை வெட்டி, நீண்ட கம்பி போன்று செய்யப் பட்டவுடன், அந்த வளையல் என்ற ரூபம் போய்விடுகின்றது. அதன் ரூபம் போனால், அதற்கு வைக்கப்பட்ட நாமமும் போய்விடுகின்றது.

அப்படியானால், அந்த நாமம் (பெயர்) எங்கே போயிற்று?

சற்று சிந்தித்தோமானால், ஒரு ரூபம் எந்த மூலத்திலிருந்து தோன்றியதோ, அங்கேயே அது ஒடுங்கும். அந்த ரூபத்தினால் தோன்றிய நாமமும், அந்த ரூபம் எங்கே ஒடுங்குகின்றதோ, அங்கேயே ஒடுங்கி விடும்.

அந்த வகையிலே, தங்கத்திலிருந்து தோன்றிய ரூபம் வளையல் என்ற நாம, ரூபத்தைப் பெற்றதோ, அதே வளையல் அந்த மூலமான தங்கத்தின் ஒடுங்கும்

போது, அதன் நாம, ரூபங்களும் அந்த தங்கத்திலேயே ஒடுங்கிவிடுகின்றன.

இதன் சாரத்தைப் பார்த்தோமானால், நாமமும், ரூபமும் பிரிக்க முடியாத ஒன்று என்பது நன்கு புலனாகின்றது.

இந்த மாண்டூக்ய உபநிஷதம் கூற வருகின்ற உண்மை என்னவெனில், முதல் மந்திரத்தில் சப்தத்தை பிரபஞ்சமாகக் கொண்டு, ரூபத்தையெல்லாம் சப்தத்திற்குள் ஒடுக்கி, சப்தம் மட்டுமே பிரபஞ்சம் என்று கூறி, இந்த சப்தத்திற்கு அதிர்ஷ்டானம் அசப்தமான பிரம்மம் என்று கூறுகின்றது.

காரணம், ஒரு சப்தம் தோன்ற வேண்டுமானால், அசப்தத்திடமிருந்துதான் (மௌனத்திடமிருந்துதான்) தோன்ற முடியும்.

எனவே, அகில ரூபத்தையும் சப்தத்திற்குள் போட்டு, சப்தத்தின் வழியாக அசப்தமான பிரம்மத்தை அறிய உள்ளோம். அது 8 - வது மந்திரத்தில் இருந்து மீண்டும் காணலாம்.

இப்பொழுது இரண்டாவது மந்திரத்தின் வாயிலாக, அகில சப்தத்தையும் ரூபத்திற்குள் போட்டு, ரூபத்தின் வழியாக விசாரம் செய்து, அரூபமான (நிர்குணமான) பிரம்மத்தை அறியப்படுகின்றது.

இங்கு ஸ்ரீ சங்கரர் கூறுகின்றார், நாமும், ரூபமும் ஒன்றாகவே இருக்கின்ற காரணத்தினால், ரூபத்தை பிரம்மத்தினுள் ஒடுக்கி விட்டால், நாமமும் ஒடுங்கி விடுகின்றது. நாமத்தை பிரம்மத்தில் ஒடுக்கி விட்டால், ரூபமும் ஒடுங்கி விடுகின்றது.

அதனால், இதில் ஏதேனும் ஒன்றை ஒடுக்கி விட்டால் கூட போதும், நாம, ரூபத்திற்கு விலட்சணமான பிரம்மத்தை எளிதாக அறிந்து கொள்ளலாம் என்கின்றார்.

அதாவது, ரூபத்தை மட்டும் ஒடுக்கி விட்டால், அதன் நாமம் என்ற சப்தம் தானாகவே ஒடுங்கி விடுகின்றது.

நாமமும், ரூபமும் ஒரேயடியாக ஒடுங்க வேண்டு மானால், உபநிஷதம் என்ன செய்ய வேண்டி யுள்ளது என்றால், பதப் பிரபஞ்சத்தை பதார்த்தத்திற் குள்ளும், பதார்த்தப் பிரபஞ்சத்தை பதத்திற்குள்ளும்

ஒடுக்கிக்காட்ட வேண்டும். ஆதனால், இந்த உபநிஷதம் இந்த இரண் டையுமே செய்கின்றது.

இரண்டாவது மந்திரத்தில் அனைத்து பதங்களும், பதார்த்தத்திற்குள் ஒடுக்கப்படுகின்றது. முதல் மந்திரத்தில் அனைத்து பதார்த்தங்களும், பதத்தில் ஒடுக்கப்படுகின்றது.

இதிலிருந்து பதமும், பதார்த்தமும் ஒன்றுதான் என்பது தெளிவாகின்றது. இந்த உபநிஷதம் இனி, ஆத்ம விசாரத்தை தொடங்க உள்ளது.

அப்படியானால், பதார்த்தப் பிரபஞ்சத்தை அல்லவா விசாரம் செய்ய வேண்டும்? பிறகு ஏன் ஆத்ம விசாரம் செய்யப்படுகின்றது என்றால், ஆத்ம விசாரம் செய்தாலும், பதார்த்த விசாரம் செய்தாலும் ஒன்று என்பதினால் இப்படி ஆத்ம விசாரம் செய்யப்பட உள்ளது.

அதாவது ஆத்மாவும், இந்த ஜகத்தும் ஒன்றாக இருந்தால் மட்டுமே, ஆத்ம விசாரத்தினால் அந்த பிரம்மத்தை அறிய முடியும்.

முதல் மந்திரத்தில் எப்படி ஓங்காரமும், ஜகத்தும் ஒன்று என்று நிரூபித்ததோ, அதைப்போல, இந்த மந்திரத்தின் வாயிலாக ஆத்மாவும் ஜகத்தும் ஒன்று என்று நிரூபிக்க வருகின்றது.

ஆத்மா = **ஜகத் (உலகம்).**

ஆத்மனும், இந்த உலகமும் எப்படி ஒன்றாக முடியும்?

சர்வம் ஏதத் பிரஹ்ம: - அனைத்தும் பிரம்மம் என்கின்றபோது, அயமாத்மா பிரஹ்ம: - இந்த ஆத்மாவும் பிரம்மம் என்றாகின்றது. ஸோயமாத்மா சதுஷ்பாத் - அதனால், ஆத்மாவே அனைத்தும் என்பது தெரிகின்றது. இந்த ஆத்மா நான்கு பரிமாணங்களை உடையது.

**பதவுரை:**

------------

ஏதது ஸர்வம் - இம்மாதிரியான எல்லாம்; ப்ரஹ்ம ஹி - பிரம்மம்[பரம்பொருள்]தான்; அயம் ஆத்மா ப்ரஹ்ம - இந்த ஆத்மாவும் பரம்பொருள்தான்;

ஸ அயம் ஆத்மா - இந்த ஆத்மா என்பவனும்; சதுஷ்யாது - நான்கு [கால்] பகுதிகளாக இருக்கிறான்.

**விளக்கம்:**

--------------

இங்கு ஆத்மாவுக்கும் பரம்பொருளுக்கும் உள்ள தொடர்பும் அத்துடன் ஓங்காரத்திற்கும் உள்ள தொடர்பும் கொண்டுவரப்படுகிறது.

முதல் செய்யுளில் ஓங்காரம்தான் இங்கு இருப்பது, இருந்தது, இருக்கப்போவது எல்லாம் என்றும், ஓங்காரம் முக்காலத்திற்கும் அப்பாற்பட்டது என்றும் கூறப்பட்டது.

இப்பொழுது எதிலிருந்து ஒரு பொருள் உண்டாகிறதோ அதில் அந்தப்பொருளின் தன்மை நிச்சயமாக இருக்கும். பாலிலிருந்து செய்யப்பட்ட இனிப்புகளில் பாலின் தன்மை இருக்கும். அதுபோல இறைவனிலிருந்து தோன்றிய உலகமும் இறையம்சம் கொண்டதாகவே இருக்கும். அதனால்தான் அனைத்தும் இறைவன் என்று கூறப்பட்டது.

மேலும், இந்த படைப்பில் காணப்படுகின்ற அனைத்தும் இறைவனே, இறையம்சம் கொண்ட வைகளே என்று கூறும்போது, நாமும் அதில் அடக்கம். எங்கும் நிறைந்த இறைவன் நம்மில் பிரகாசிக்கும் போது **ஆத்மா** என்று பெயர் பெறுகிறார். அதாவது நம்மில் உள்ள ஆத்மாவும் இறைவனும் ஒன்றே.

காண்கின்ற உலகம் இறைவனே, ஆத்மாவும் இறைவனே. அப்படியென்றால் உலகமும் ஆத்மாவும் இறைவனே, அதாவது எல்லாம் இறைவனே இறையம்சமே.

இந்த மந்திரத்தில் உள்ள **'அயம் ஆத்மா ப்ரஹ்ம்'** என்ற சொற்றொடர் மகா வாக்கியங்களுள் ஒன்றாகும்.

இந்த ஒரு சுலோகத்தினை கவனிப்போம்.

ஓம் என்பது காலவட்டத்திற்கு உட்பட்டது, அதற்கு அப்பாற்பட்டதும்கூட என்று சொல்லிவிட்டு, அவை எல்லாம் பரம்பொருளே [பிரம்மமே என்றால்] இங்கு நாம் காணும், கண்ட, காணப்போகும், மற்றும் காலச் சக்கரத்திற்கு அப்பாற்பட்ட - அதாவது நமது அறிவுக்கு, புலனுக்குக் கட்டுப்படாத, கண்டறிய

இயலாத எல்லாமே பரம்பொருள் என்று உறுதி செய்யப் படுகிறது.

அடுத்தபடியாக, பரம்பொருளே **ஆத்மா** என்று இணைப்பு கொடுக்கப்படுகிறது.

இப்படிச் சொன்னவுடன் நம் மனதில் எழும் கேள்வி என்னவாக இருக்கும்?

'**ஓம்**'தான் எல்லாம் என்றும் சொல்லி, அதுவே பரம்பொருள் என்றும் சொல்லி, அதுதான் ஆத்மா என்றால், அந்த ஆத்மா என்பது என்ன என்பதாகத் தானே இருக்கும்?

இந்த ஆத்மா என்ற ஒன்று நம் உடலுக்குள் இருக்கிறது, அதைத்தான் நாம் என்று உணருகிறோம். இந்த ஆத்மாவைப் பற்றி பலவிதமான விளக்கங்களும், பலராலும் சொல்லப்பட்டுக் கேள்விப்பட்டிருக்கிறோம்.

இருந்தும் ஆத்மா என்றால் என்ன என்பது ஒரு குழப்பமாகவே இருந்து வருகிறது.

இந்த ஆத்மா நமது உடலுக்குள் இருக்கிறது என்றால் அது என்ன செய்கிறது, அதன் இயல்புகள் என்ன என்று அறியும் ஆவல் பிறக்கிறது.

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்வதுபோல, ஆத்மா நான்கு பகுதிகளாக இருக்கிறது என்றும் சொல்லப்படுகிறது.

நான்கு பகுதிகள் என்றால் நான்கு கால் பகுதிகள் என்றுதானே பொருள்?

இந்த ஆத்மா என்று சுட்டப்படுகிறதே, அப்படியென்றால் இது, இந்த ஆத்மா நான்கு கால்கள் உள்ள ஒரு மிருகத்தைப்போன்றதா - அல்லாது போனால், இரண்டு கால்களும் இரண்டு கைகளும் உள்ள மனிதனைப் போன்றதா? - அல்லது ஒரு நாணயத்திற்கு இரண்டு பக்கங்கள் உள்ளது போல, இது நான்கு பக்கங்கள் உள்ள கனசதுரமா என்றும் குழப்பம் ஏற்படுகிறது.

**“இந்த நான்கு பகுதிகளை எப்படி அறிந்துகொள்வது?”** என்று மேலும் குழம்புகிறோம்.

அந்தக் குழப்பத்தை நீக்குவதுப் போல ஆத்மாவின் நான்கு பகுதிகளுக்கும் இனி வர இருக்கின்ற மந்திரத்தில் விளக்கம் கொடுக்கப்படுகிறது.

இந்த உபநிஷத்திற்கு ஆத்மாவின் உண்மை நன்கு தெரியும். அதாவது ஆத்மா என்பது இந்த பிரபஞ்சம் ஏற்றிவைக்கப்படாத, தனித்த, நிர்குணமான சத்சித்தானந்த ஸ்வரூபம் என்று நன்றாகத் தெரியும்.

இருப்பினும், நாம் ஆத்மாவை எப்படிப் புரிந்து வைத்துக்கொண்டுள்ளோமோ, அதற்கு ஏற்ப நமக்காக அனாத்மாவுடன் சேர்த்து நாம் புரிந்துக் கொண்டதுப் போலவே, உபநிஷதமும் இங்கு அதே பாணியில் நமக்குப் புரிய வைக்க முயற்சிக்கின்றது.

பொதுவாக, நாம் அத்மாவை எப்படி புரிந்து கொண்டிருக்கின்றோம் எனில், ஆத்மா, அனாத்மா என்ற இரண்டினையும் சேர்த்து '**ஆத்மா**' என்று புரிந்து கொண்டிருக்கின்றோம்.

அதாவது உண்மையையும், பொய்யையும் கலந்து **"ஆத்மா"** என்று புரிந்து கொண்டிருக்கின்றோம்.

இப்படிப்பட்ட ஆத்மா நான்காக பிரிக்கப் படுகின்றது. ஆத்மாவை உண்மையில் பிரிக்க முடியாது. அது ஸோயமாத்மா என்பதிலிருந்து அது பிரம்மம் என்று அறியமுடிகின்றது. பிரம்மத்தை பிரிக்கவே முடியாது.

ஆனால், ஜீவன் அதை பிளவுபட்டதுப்போல புரிந்து கொண்டுள்ளான். அதாவது, **“நான்”** (ஆத்மா) என்பதை இந்த அனாத்மாவுடன் சேர்த்து குழப்பத்துடன் புரிந்து கொண்டுள்ளான்.

இந்த கருத்தின் அடிப்படையிலேயே ஆத்மா இங்கு நான்காகப் பிரிக்கப்படுகின்றது.

இதில், முதல் மூன்று பகுதிகள் அத்யஸ்த (அனாத்மா) ஸ்வரூபம் என்றும், நான்காவது பிரம்ம ஸ்வரூபம் என்றும் கொள்ளலாம்.

ஆத்மா = நான்கு பகுதிகள்.

முதல் மூன்று பகுதிகள் ஏற்றிவைக்கப் பட்டதாகவும், நான்காவது பகுதியை அதிஷ்டான மாகவும் வைத்துக் கொண்டு இந்த உபநிஷதம் விளக்க முற்படுகின்றது.

பிரிக்க முடியாத ஆத்மாவை நான்காக எப்படிப் பிரிக்க முடியும்?

உதாரணமாக,

ஒரு பசு இருக்கின்றது, அதற்கு நான்கு கால்கள் என்று பிரித்துக் கொள்கின்றோம். அல்லது ஒரு வீட்டை எடுத்துக் கொண்டாலும், அங்கு சுவர் வைத்து நான்கு அறைகள் பிரிக்கப்பட்டுள்ளன. அதாவது, இங்கு ஒரே அறை சுவற்றின் வாயிலாக நான்காகப் பிரிக்கப்பட்டது உண்மை. அதுப்போலவே, ஒரு பசுவிற்கு நான்கு கால்களாகப் பிரிக்கப் பட்டுள்ளதும் உண்மை.

அடுத்து ஒரு ரூபாய் காசு ஒன்றை எடுத்துக் கொண்டு, அதை நான்கு 25 பைசா காசுகளாகப் பிரித்து கொள்கின்றோம். இந்த பிரிவு உண்மையானதா அல்லது கற்பனையா? என்றால்,

இருப்பது ஒரு பசு, ஆனால், அதன் பிரிவுகளான கால்களை வைத்து நான்காகப் பிரிக்கின்றோம், அடுத்து இருப்பது ஒரே வீடு, அப்படி ஒரே அறையாகக் கட்டப்பட்ட வீட்டை நம்முடைய தேவைக்காக சுவர்களின் வாயிலாக நான்கு அறைகளாகப் பிரித்துக் கொள்கின்றோம்.

அதுபோன்றே, ஒரே ஒரு ரூபாய் என்ற நாணயத்தின் மதிப்பை நம்முடைய தேவைக்காக 25 பைசாக்களாக நான்காகப் பிரிக்கின்றோம்.

இதுப்போல, இங்கும் நாம் பிரிக்க முடியாத ஆத்மாவை புரிந்து கொள்ள நம் தேவைக்காக கற்பனையாக நான்காகப் பிரித்து இந்த உபநிஷதம் நமக்கு ஆத்மாவை விளக்க முற்படுகின்றது.

(3) **ஜாகரிதஸ்தானோ பஹி:ப்ரஜ்ஞ: ஸப்தாங்க**
**ஏகோனவிம்ஸதிமுக:**
**ஸ்தூலபுக் வைஸ்வானர: ப்ரதம: பாத:**

விழித்திருக்கும் நிலையில் இதன் உணர்வு புற முகமாக உள்ளது. ஏழுறுப்புகளும் பத்தொன்பது வாய் களுமுள்ளவன், விழிப்பு நிலையில் புற உலகை அனுபவிப்பவனான இவரை முதல் பரிமாணமாக வைஸ்வானரன் எனப்படுகின்றது.

**பதவுரை:**

-------------

வைஸ்வாநர: வைஸ்வாநரன்; ஜாக்3ரிதஸ்தா2னோ - விழித்திருக்கும் நிலையில்; ப3ஹிஷ்பிரக்ஞ: - வெளி[யில் நடக்கும் விஷயங்களை]

அறிவுடையன்; சப்தாங்க: - ஏழு உறுப்புகள் உள்ளவன்; ஏகோனவிம்ஸதி முக2: - பத்தொன்பது வாய்கள் உள்ளவன், ஸ்தூ2லபு4க்3 - திடப்பொருள்களை அனுபவிப்பவன்; ப்ரத2ம: பாத3: - [அவன்] முதல் பகுதியாகிறான்.

**விளக்கம்:**

--------------

இந்த சுலோகத்தில் நாம் விழித்திருக்கும் நிலையில் வேலை செய்கிறோம், படிக்கிறோம், விளையாடுகிறோம், சிந்திக்கிறோம். இதையெல்லாம் செய்கின்ற அதாவது விழிப்பு நிலையில் இந்த உலகை அனுபவிப்பவன் வைசுவானரன்.

எல்லாச் சமயங்களிலும் நம் உடலுக்குள் இருந்து கொண்டு நம்மை இயக்குவது ஆத்மா [self, soul] என்று உலகச் சமயங்கள் கூறுகின்றன. நாம் விழித்திருக்கும் நிலை நம்மை இயக்கும் அந்த ஆத்மாவின் முதல் நிலை என்று அறியப்படுகிறது.

அந்த முதல்நிலைக்கு **“வைசுவானரன்”** என்ற பெயர் கொடுக்கப்பட்டுள்ளது.

விஸ்வ - இவ்வண்டமான - நரன் - மனிதன். அதாவது விஸ்வ+நரன் தெய்வீக சக்தி உள்ள மனிதன்.

இப்பெயர் தனி மனிதனுக்குக் கொடுக்கப் படவில்லை.

இவ்வண்டத்தில் உள்ள அனைத்து ஜீவராசிகளின் மொத்த அறிவையும் ஒரு மனிதனிடம் கொடுத்திருப்பதாக உருவகப்படுத்தப்படுகிறது.

பரம்பொருளே ஆத்மன் என்று சொல்லிவிட்டு, அந்த ஆத்மனுக்கு நான்கு பகுதிகள் என்று சொல்லி, அந்த ஆத்மன் விழித்திருக்கும் நிலையில் வெளி அறிவுடன் இயங்குகிறான் என்றால் - அவனுடைய புரிதல் வெளியுலகத்தில் இருக்கிறது என்று பொருள்.

அதுதான் அவனுடைய இயக்க நிலை என்றால் - அது நம் அனைவருக்கும் பொருந்துகிறது. நமக்கு மட்டுமல்ல, நமக்குத் தெரிந்த மற்ற அனைத்து உயிரினங்களுக்குமே.

நாம் வெளியுலகில் நடப்பதை வைத்துக் கொண்டுதான், நமக்கு வெளியில் நடப்பதின் மூலம்தான் நமது அறிவைப் பெறுகிறோம்.

அதை எப்படிப் பெறுகிறோம்? அந்த வைசுவானரன் எப்படிப் பெறுகிறான்?

வைசுவானரனுக்கு சில அடையாளங்கள் இந்த மந்திரம் கூறுகின்றது.

அவனுக்கு ஏழு உறுப்புகளும், பத்தொன்பது வாய்களும் உள்ளன என்று கொடுக்கப் பட்டிருப்பதால் அவை என்னவாக இருக்க முடியும், அவை எப்படி வெளி அறிவைப் பெற உதவி செய்கின்றன என்பதை பார்க்கலாம்.

முதலில் ஏழு உறுப்புகள் எதுவாக இருக்கும்?

விண்ணே அவனது தலை, சூரியன் கண்கள், காற்றே உயிர்மூச்சு, வெற்றிடமே நடுப்பகுதி, தண்ணீரே அவனது சிறுநீரகம், நிலமே அவனது கால்கள், வேள்விக்கான நெருப்பே [அஹவனீய அக்னி - கிருஷ்ண யஜூர்வேதம்] அவனது வாய் என்று சொல்லப்படுகிறது.

நாம் புற உலகை அனுபவிப்பது நமக்குத் தெரிந்த, நாம் காண்கின்ற நமது ஸ்தூல உடம்பினால் ஆகும்.

புறப் பிரபஞ்சமே நமது சரீரமாக (உடம்பாக) கூறப்பட்டதன் மூலம், நமது ஸ்தூல சரீரம் புறப் பிரபஞ்சத்தின் ஓர் அங்கம் என்பது சுட்டிக்காட்டப் படுகிறது.

**(அண்டத்தில் உள்ளதே பிண்டத்தில் உள்ளது என்பதனையும் அறிக)**

இப்பொழுது 19 வாய்கள் எவை என்று நோக்கினால் அவை,

நமது ஐம்புலன்களான கண் (பார்த்தல்), காது (கேட்டல்), மூக்கு (வாசனை), நாக்கு (சுவையறிதல்), தோல் (உணர்தல்) ஆகிய அறிவுக் கருவிகளான ஞானேந்திரியங்கள் ஐந்தும், வாய் (பேச்சு), கை (செயல்கள்), கால் (நடத்தல்), குதம் மற்றும் குறி (கழிவு வெளியேற்றம்) ஆகிய செயற்கருவிகளான கர்மேந்திரியங்கள் ஐந்தும், ஐந்து உயிர் காற்றுகளான பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன்) ஐந்து வகைக் காற்றுகளும் நம் உடலில் சக்தியை நிலை நிறுத்துகின்றன.

இத்துடன் மனம், அறிவு, நான் உணர்வு (ஆணவம்), சித்தம் ஆகிய 19 கருவிகளின் மூலம் நாம் புற உலகை அனுபவிக்கிறோம்.

இவற்றை ஏன் வாய் என்று சொல்கிறார்கள்?

இவைதான் உயிரினங்களின் அனுபவங்களின் - பட்டறிவின் நுழைவாயில்கள். இவைகளின் மூலம்தான் உயிரினங்கள் தங்களது வெளி அனுபவத்தைப் பெறுகின்றன.

மேலே சொல்லப்பட்ட உறுப்புகளும், வாய்களும் வெளி உலகத்தையே பார்ப்பதால், அவற்றையே அனுபவிப்பதால், ஆத்மனின் முதல் பரிமாணம் **வைசுவானரன்** அல்லது **விஸ்வன்** என்று அழைக்கப்படுகிறது.

நம்முடைய அனுபவங்கள் எதுவும் வீணாகுவ தில்லை. புலன்கள் வாயிலாக நாம் பெறுகின்ற அனுபவங்கள் ஒவ்வொன்றும் ஒரு பதிவாக மனத்தின் ஒரு பகுதியில் சேர்த்து வைக்கப்படுகின்றது.

இதுவே சித்தம் ஆகும். இதனை **ஆழ்மனம்** என்றும் அழைக்கப்படுகின்றது.

உணர்வுமனம் ஒன்றை நிச்சயிக்க முடியாமல் குழப்பமடையும் பொழுது சித்தத்திலுள்ள அனுபவங்

களை ஒப்பிட்டுப் பார்த்து, புத்தி ஒரு முடிவிற்கு வருகின்றது.

**‘அவனா, இவனா?’** என்ற கேள்விகள் எழும் பொழுது புத்தி ஆழ்மனத்தில் தகவல்களைத் தேடுகின்றது. அவன் ஏற்கனவே நாம் பார்த்தவனாக இருந்தால் அந்த பதிவுகள் அங்கே இருக்கும். அதை வைத்து **‘இது அவன் தான்’** என்று புத்தி நிச்சயம் செய்கிறது.

நாம் விழித்திருக்கும் போதும், கனவு காணும் போதும், தூங்கும்போதும், எந்த நிலையிலும் சரி **‘நான் இருக்கிறேன்’** என்ற உணர்வு நம்மை விட்டு நீங்குவ தில்லை.

அது நமது மனத்தின் பின்னணியில் எப்போதும் இருக்கும். இதுவே நான் உணர்வு (Ego). எந்த அனுபவத்திற்கும் அடிப்படையாக இருப்பது இது. இந்த **“நான்”** இல்லாமல் எந்த அனுபவமும் இல்லை.

இவ்வாறு 19 வாசல்கள் வழியாக புற உலகை நாம் அனுபவிக்கின்றோம்.

நம்மை எடுத்துக்கொண்டாலே, நாம் உள்ளாக எதையும் உணர்வதில்லை. நமக்குத் தெரியும், நாம் பகுத்தறியும் எதுவும் நமக்கு வெளியிலிருந்து வருவதே நமது ஐம்புலங்களாலும், ஐந்து உணர்வுகளாலுமே கிடைக்கின்றன. நமக்குத் தெளிவாகப் புரிவதை மட்டுமே நம்மால் அனுபவிக்க முடிகிறது.

உடனே, நமது அறிவு ஒரு கேள்வியை எழுப்புகிறது:

*“ஆத்மன்தான் பிரம்மம் என்றால், அவன்தான் ஓங்காரம் என்றால், விண் [சுவர்க்கம்], சூரியன், பூமி, தண்ணீர், இன்னும் மற்றவை எல்லாம் தலை, உள்ளுறுப்புகள் என்று ஏன் சொல்லப்படுகின்றன?”*

இப்படி விளக்குவது பொருத்தமற்ற ஒன்று என்று எண்ணவேண்டியதில்லை.

புலன்களால் உணர்ந்து அறிந்துகொள்ளக்கூடிய அண்டத்தையும், கடவுளர்களின் இருப்பிடத்தையும் ஆத்மனை தெய்வீகமாக உருவகப்படுத்தும் ஒரு பகுதியாக [விராட்] குறிப்பிடுவது இருமை என்ற நிலையை நீக்கி எல்லாம் ஒன்றே என்று பின்னால் நிறுவுவதற்கு அடிகோலுகிறது.



இப்படி உரைப்பது - ஆத்மன் எல்லாவற்றிலும் நிறைந்திருக்கிறான், எல்லாமே ஆத்மா ஆத்மன்தான் என்பது - வேதங்களில் குறிப்படப்படும் **"அஹம் ஏவ ப்ரஹ்மன் [நானே பரம்பொருள்]"** என்பதை அடிப்படையாகக் கொள்கிறது.

அனைத்தையும் தன்னிலிருந்து நீக்கிப் பார்க்கும் உணர்வு விழித்திருக்கும் நிலைக்கே உரித்தானது என்கிறது.

ஆத்மன் எல்லாவற்றிலும் நிறைந்திருக்கிறான், எல்லாமே ஆத்மா ஆத்மன்தான் என்பது - வேதங் களில் குறிப்படப்படும் **“அஹம் ஏவ ப்ரஹ்மன்”** [நானே பரம்பொருள்] என்பதை அடிப்படையாகக் கொள்கிறது.

அனைத்தையும் தன்னிலிருந்து நீக்கிப் பார்க்கும் உணர்வு விழித்திருக்கும் நிலைக்கே உரித்தானது என்று கூறப்பட்டது.

இனி அது எவ்வாறு கூறப்படுகிறது என்பதைக் காணலாம்.

இங்கு ஆத்ம விசாரத்தை அவஸ்தாதிரைய விவேகம் என்பதின் மூலமாக விசாரம் செய்யப் படுகின்றது. தைத்திரிய உபநிஷத்தின் வாயிலாகவும் ஆத்ம விசாரம் நடைபெற்றது. அது பஞ்ச கோஷங் களின் வாயிலாக ஆத்ம விசாரம் நடந்தது.

இங்கு ஆத்ம விசாரம் என்று எதை அழைக்கின்றோமோ, அதை அவஸ்தாத்திரைய விசாரம் என்று புரிந்து கொள்ள வேண்டும்.

இனி, ஒரு பூரணமான ஆத்மா, விசாரத்திற்காக நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்படுகின்றது. இந்த

மந்திரத்தின் வாயிலாக ஆத்மாவின் முதல் பகுதி விளக்கப்படுகின்றது.

இதில் ஜகத்தை விசாரித்து, அதன் வாயிலாக ஆத்மாவை அறிவிக்க விரும்பிய இந்த உபநிஷதம் ஆத்மாவை நான்கு பகுதிகளாக பிரித்து, ஆத்மாவின் நான்கு பகுதிகளில் முதல் மூன்று பகுதிகள் மூன்று அவஸ்தைகளைப் பற்றி விசாரம் செய்து, அதன் பிறகு ஆத்மாவை அறிவிக்க உள்ளது.

மூன்று பகுதிகள் = மூன்று அவஸ்தைகள் = ஜகத் (உலகம்).

விசாரத்தின் வாயிலாக இந்த அகில உலகமே இந்த மூன்று அவஸ்தைகளில் அடங்கப்போகின்றது. இதில் நான்காவது பகுதி இந்த மூன்று அவஸ்தை களுக்கும் ஆதாரமாக இருக்கின்றது. ஆதலால், இந்த நான்காவது பகுதி இந்த ஜகத்திற்கு அதிர்ஷ்டானம் (ஆதாரம்) ஆகும். அப்படிப்பட்ட ஆதாரம் இந்த பிரம்மம் (ஆத்மா) என்பது அறியப்பட உள்ளது.

ஜகத் (அகில பிரபஞ்சம்) என்பது மூன்று விதத்தில் இருக்கின்றது. அவைகள், ஒன்று ஸ்தூலப் பிரபஞ்சம், இரண்டாவது சூக்ஷுமப் பிரபஞ்சம்,

மூன்றாவது காரணப் பிரபஞ்சம் என்று மூன்றாக இந்த பிரபஞ்சத்தை பிரிக்கின்றோம்.

ஸ்தூலப்பிரபஞ்சம் என்றால், நாம் பார்த்து அனுபவிக்கின்ற இந்த உலகம். அதாவது பஞ்சீகிரத பஞ்ச மஹா பூதங்களால் ஆனது, இந்த ஸ்தூல பிரபஞ்சம் ஆகும்.

சூக்ஷூமப் பிரபஞ்சம் என்பது, பஞ்சீகரணம் ஆகாத பஞ்ச பூதங்களால் ஆனது. அதாவது, நம்முடைய மனம், எண்ணங்கள் போன்றவைகளால் ஆனது ஆகும்.

காரணப் பிரபஞ்சம் என்பது, இந்த இரண்டு பிரபஞ்சங்களும் தோன்றுவதற்கு காரணமாக இருக்கின்றது ஆகும். இதைத்தான் மாயை என்று கூறுகின்றோம்.

இந்த மாயைக்கு மூன்று குணம் உள்ளது.

அவைகள் **சத்**, **ரஜஸ்**, **தமஸ்** என்பன. இந்த மூன்று குணங்களுமே சூக்ஷூம பிரபஞ்சமாக மாறியது. அதன் பிறகு அந்த மூன்று குணங்களுமே ஐந்து

பூதங்களாக மாறி, பிறகு ஒவ்வொரு இந்திரியங்களாக மாறியது.

(குறிப்பு: - இதைப்பற்றி விரிவாக **"தத்வபோதம்"** என்ற நூலின் வாயிலாக மேலும் காணலாம்.)

இவ்விதம் ஸ்தூல, சூக்ஷ்ம, காரணப் பிரபஞ்சம் என்று இந்த உலகத்தை மூன்றாகப் பிரிக்கப்படுகின்றது.

இந்த ஸ்தூலப் பிரபஞ்சத்தை **"ஜாக்ரத் பிரபஞ்சம்"** என்று ஒரு புதிய பெயரில் அழைக்கலாம். இதில் ஜாக்ரத் என்றால் விழிப்பு என்று பொருள். எனவே விழிப்பு நிலை பிரபஞ்சம் என்று பொருள் கொள்ளலாம்.

ஏன்? இந்த ஸ்தூலப் பிரபஞ்சத்தை **"ஜாக்ரத் பிரபஞ்சம்"** என்று அழைக்கப்படுகின்றது என்றால், நம்மால், இதை (ஜாக்ரத் அவஸ்தையில்) விழிப்பு நிலையில் அனுபவிக்கப்படுவதினால், இவ்வாறு இந்த பெயர் சூட்டி அழைக்கப்படுகின்றது.

ஸ்தூலப் பிரபஞ்சம் = ஜாக்ரத் பிரபஞ்சம் = ஜாக்ரத் அவஸ்தை.

ஜாக்ரத் அவஸ்தை என்பதை விழிப்பு நிலை அனுபவம் என்று அறியவேண்டும். அதனால், நம்முடைய இப்பொழுது விழித்துக் கொண்டு இந்த உலகத்தை அனுபவிக்கின்ற அல்லது காணுகின்ற காட்சிக்கு ஜாக்ரத் பிரபஞ்சம் அல்லது **"ஸ்தூல பிரபஞ்சம்"** என்று அழைக்கின்றோம்.

அடுத்து சூக்ஷும பிரபஞ்சத்தை **"ஸ்வப்ன பிரபஞ்சம்"** என்று ஒரு புதிய பெயரில் அழைக்கலாம். இதில் கனவு நிலையில் என்ன அனுபவிக்கப் படுகின்றதோ அதை ஸ்வப்ன அவஸ்தா அல்லது கனவு நிலை என்ற **சூக்ஷும பிரபஞ்சம்** என்று பொருள் கொள்ளலாம்.

நம்மால், இதை (ஸ்வப்ன அவஸ்தையில்) கனவு நிலையில் அனுபவிக்கப்படுவதினால், இவ்வாறு இந்த பெயர் சூட்டி அழைக்கப்படுகின்றது.

ஸ்வப்ன அவஸ்தை என்பதை கனவு நிலை அனுபவம் என்று அறியவேண்டும். அதனால், நம்முடைய கனவில் அனுபவிக்கின்ற அல்லது காணுகின்ற காட்சிக்கு **ஸ்வப்ன பிரபஞ்சம்** அல்லது **"சூக்ஷும பிரபஞ்சம்"** என்று அழைக்கின்றோம்.

அதுபோல, காரணப் பிரபஞ்சம் என்பது சுஷுப்தி அவஸ்தையில், அதாவது ஆழ்ந்த உறக்க நிலையில் என்ன அனுபவிக்கப்படுகிறதோ அது **“காரணப் பிரபஞ்சம்”** எனப்படும்.

இந்த ஜாக்ரத் அவஸ்தை (விழிப்பு நிலை அனுபவம்) யாருக்கு என்றால், ஆத்மாவிற்கு என்று அறிய வேண்டும்.

எப்பொழுது, இந்த ஆத்மாவிற்கு ஜாக்ரத அவஸ்தை ஏற்படுகின்றது என்றால், ஆத்மாவானது தன்னுடைய அனுபவத்தை இந்த ஸ்தூல சரீரம்வரை கொண்டு செல்கின்றதோ அப்பொழுது ஜாக்ரத் அவஸ்தை உண்டாகின்றது.

(**குறிப்பு:-** இங்கு முக்கியமாக என்ன தெரிந்து இருக்க வேண்டும் என்றால், ஒவ்வொரு ஜீவனிடத்திலும் மூன்று சரீரங்கள் (ஸ்தூல, சூக்ஷும, காரண சரீரங்கள்) இருக்கின்றன என்பதை நாம் மறக்கக் கூடாது. அதனால்தான் **“தத்வபோதம்”** என்ற நூலைப் முழுவதுமாகப் படித்துவிட்டு இந்த உபநிஷதத்தை படிக்க வர வேண்டும். இல்லை யென்றால் இதைப் படித்து புரிந்து கொள்ள சற்று குழப்பமாகவே இருக்கும்.)

ஆத்மா (நான்) தன்னுடைய அபிமானத்தை ஸ்தூல சரீரம் வரை கொண்டு சென்று அனுபவிப்பதை விழிப்பு நிலை அனுபவமாக ஜாகரத் அவஸ்தையாக அறிகின்றது. அதாவது ஜாக்ரத் பிரபஞ்சத்தை அனுபவிக்கின்றது.

ஆத்மாவாகிய நான் தன்னுடைய அபிமானத்தை சூக்ஷும சரீரம் வரை கொண்டு சென்று அனுபவிப்பதை கனவு நிலை அனுபவமாக ஸ்வப்ன அவஸ்தையாக அறிகின்றது. அதாவது ஸ்வப்ன பிரபஞ்சத்தை அனுபவிக்கின்றது.

ஆத்மாவாகிய நான் தன்னுடைய அபிமானத்தை காரண சரீரம் வரை கொண்டு சென்று அனுபவிப்பதை ஆழ்ந்த உறக்க நிலை அனுபவமாக சுஷுப்தி அவஸ்தையாக அறிகின்றது. அதாவது காரண பிரபஞ்சத்தை அனுபவிக்கின்றது.

(குறிப்பு:- இந்த மூன்றாவது மந்திரம் ஜாக்ரத் அவஸ்தையை மட்டுமே கூறுகின்றது. ஆனால், நாம் புரிந்து கொள்ள ஏதுவாக இந்த மூன்று அவஸ்தை களையும் ஒப்பிட்டுப் பார்க்கின்றோம் என்பதையும் அறியவும்.)

இந்த மூன்று அவஸ்தைகளும் ஆத்மாவிற்கு வருவது போன்று தோன்றுவதால், அதையே ஆத்மாவாகிய **"நான்"** அனுபவிக்கின்றேன் என்று கூற முடிகின்றது.

இந்த அகில உலகத்தை ஸ்தூல, சூக்ஷும, காரண பிரபஞ்சம் என்று மூன்றாக பிரித்து, அதில் முதலாவதாக உள்ள இந்த ஸ்தூல பிரபஞ்சத்தையும் மூன்றாக பிரிக்க உள்ளோம்.

அவைகள்,

1. ஜாகரத் பிரமாதா
2. ஜாக்ரத் பிரமாணம்
3. ஜாக்ரத் பிரமேயம். என்பனவாகும்.

இதில் பிரமாதா என்றால் அறிபவன், பிரமாணம் என்றால் அறிவைக் கொடுக்கும் கருவி, பிரமேயம் என்றால் அறியப்படும் பொருள் ஆகும்.

ஞானத்தைக் கொடுக்கும் இந்திரியங்கள் பிரமாணம் ஆகும்.

ஆத்மாவாகிய நான் மனதில் பிரதிபிம்பிக் கின்றேன், இதற்கு '**சிதாபாசன்**' **(போலி அறிவு)** என்று பெயர்.

இந்த சூக்ஷும சரீரத்தில் இருக்கின்ற சிதாபாசனை **பிரமாதா** என்றும், இந்த மனம் இந்திரியங்களை **பிரமாணமாகக்** கொண்டு இந்த உலகம் **பிரமேயம்** என்பதை அறிய உள்ளோம்.

ஆகவே ஆத்மாவுடன், ஜாக்ரத் பிரமாதாவும், ஜாக்ரத் பிரமாணமும் சேர்ந்து கலந்த தத்துவத்தை **"விஸ்வன்"** என்று அழைக்கின்றோம்.

ஆத்மாவையும், அனைத்து பிரமேயத்தையும் சேர்ந்து பார்த்தால் **"விராட்"** என்று அழைக்கப் படுகின்றது. இதையே **"வைஸ்வானரன்"** என்றும் கூறலாம்.

இனி விஸ்வனுக்கும், விராட்டுக்கும் உள்ள ஒற்றுமை, வேற்றுமை என்ன?

இதில் ஒற்றுமை என்னவென்றால் இரண்டும் ஆத்மா என்பதாகும்.

விராட் என்பது அனைத்தையும் (சமஸ்டி) சேர்ந்தது, விஸ்வன் என்பது தனித்த (வியஸ்டி) ஒன்று.

**விஸ்வ**: என்றால் சர்வம் என்று பொருள்.

இந்த ஸ்தூல சரீரம் முதற்கொண்டு அனைத்து சரீரங்களின் மீதும் அபிமானம் வைத்ததினால் ஆத்மாவிற்கு **'விஸ்வன்'** என்று பெயர் வந்தது.

ஒட்டுமொத்த பிரபஞ்சமுமே விராட் ஆகும். பிரம்மம் பிரம்மமாக தெரியாது பிரபஞ்சமாக நிலை கொள்ளும்போது, வெறும் தோற்றம் மாத்திரமாகத் தெரியும் இந்த பிரபஞ்ச வஸ்துவைத்தான் **'விராட்'** என்றழைக்கிறோம்.

விழிப்பு, கனவு, மற்றும் ஆழ்ந்த உறக்க நிலை என்னும் மூன்று நிலைகளுடன் தொடர்பு கொண்டிருக்கும் பொழுது ஆதமாவானது முறையாக விஸ்வன், **தைஜஸன்** மற்றும் **பிராஜ்ஞன்** என்று அழைக்கப்படுகின்றது.

அதைபோன்றே சமஸ்டி உபாதியுடன் கூடியிருக்கும் பொழுது ஆத்மாவிற்கு இந்த மூன்று நிலைகளும், மூன்று பெயர்களும் கற்பிக்கப்பட்டுள்ளது.

இதையே ஸ்தூல பிரபஞ்ச கண்ணோட்டத்தில் பார்க்கின்ற பொழுது, ஸ்தூல பிரபஞ்சத்தின் சமஸ்டி என்று கற்பித்துக்கொள்ளும் பொழுது, அது **“விராட்”** என்று அழைக்கப்படுகின்றது.

சூக்ஷ்ம பிரபஞ்ச கண்ணோட்டத்தில் பார்ர்கின்ற பொழுது, அதாவது, பிரபஞ்சத்தின் அந்தராத்மா என்று கற்பித்துக் கொள்ளுகின்ற பொழுது அது **“ஸூத்ராத்மா”** அல்லது **“ஹிரண்யகர்பன்”** என்று அழைக்கப்படுகின்றது.

காரண பிரபஞ்சத்தின் கண்ணோட்டத்தில் பார்க்கின்ற பொழுது, சிருஷ்டி, திதி, லயம் (ஆக்கல், காத்தல், அழித்தல்) செய்பவனாகக் காணுகின்ற பொழுது அது **“ஈஸ்வரன்”** என்று அழைக்கப் படுகின்றது.

ஆனால், தூய்மையான ஆத்மாவானது இந்த மூன்றிற்கும் அப்பாற்பட்டு, முன்றிற்கும் ஆதாரமாக இருப்பதினால் **“துரீய”** அல்லது நான்காவது எனப் படுகின்றது.

ஒவ்வொரு அவஸ்தையிலும், அந்த அவஸ்தையுடன் சேர்ந்து அனுபவிப்பதும் ஆத்மா என்று அறிந்து கொள்ள வேண்டும்.

அனுபவிப்பவனும், அனுபவிக்கப்படுகின்ற பொருளும் நானாகவே இருக்கின்றேன் என்பது இங்கு சாரம்.

இப்படி எதற்காக விஸ்வனையும், விராட்டையும் ஒன்றாக்க வேண்டும் என்ற சந்தேகம் வந்தால், இதற்கு ஸ்ரீசங்கரர் இங்கு விளக்கமளிக்கின்றார்.

விஸ்வனை மட்டும் தனித்து வைத்துக் கொண்டு பார்த்தோமானால், சாங்கிய மதம் கூறுகின்றதுப் போல ஆகிவிடும்.

சாங்கிய மதம் என்ன கூறுகின்றது என்றால், ஒவ்வொரு ஆளுக்கும் ஒவ்வொரு ஆத்மா என்பது அவர்களது கூற்று ஆகும். அதாவது, அனேக ஆத்மாக்கள் இருப்பதாக அவர்கள் கூறுகின்றனர்.

ஆனால், அத்வைத கூற்றுப்படி அனைத்தும் ஆத்மா என்ற நிலை உருவாக வேண்டுமானால், விஸ்வன், விராட் என்ற இரண்டும் சேர்த்து எடுத்துக் கொள்ளப்படுகின்றது.

அதாவது, காடு என்பது ஒன்றுதான், ஆனால், அதனுள் பல வகையான மரங்கள் காணப்படுகின்றன.

இப்படி பலவகையான மரங்களின் கூட்டம் சேர்ந்த பகுதியை நாம் எப்படி ஒருமையில் **“காடு”** என்று அழைக்கின்றோமோ, அதைப்போன்றே, பரமா(ஆ)த்மா ஒன்றுதான், அவரது விக்ஷேப சக்தியினால், (ஒடுங்கி விரியும் சக்தி) பல உருவங்களை உடையனவாக இந்த உலகம் தோன்று கின்றது. இவைகள் தென்படுகின்ற உருவங்களே தவிர உண்மையல்ல என்ற **“வேதாந்த சாரம்”** பாடங்களையும் படித்து அறிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும்.

இனி இந்த மூன்றாவது மந்திரத்தைக் காணுகின்ற பொழுது ஒரு விவேகத்துடன் காண வேண்டும். எந்த சொல் விஸ்வனை குறிக்கின்றது, எந்த சொல் விராட்டைக் குறிக்கின்றது. சில சொற்கள் இரண்டையும் குறிக்கும் என்பது தெரிந்திருக்க வேண்டும்.

(**குறிப்பு:-** இங்கு புரிவது சிலருக்கு சிரமமாகத் தோன்றினாலும், போகப் போக அனைத்தும் தெளிவாகப் புரியும். நான்கு பகுதிகளையும் முடித்து ஆத்மாவை அறியும்வரை பொறுமையுடன் படித்து வந்தால் இந்த ஒரு மாண்டூக்ய உபநிஷதம் மட்டுமே போதும் பிரம்மத்தை அறிந்து கொள்ள முடியும்.)

(4) **ஸ்வப்னஸ்தானோ அந்தப்ப்ரக்ஞ: ஸப்தாங்க ஏகோநவிம்சதிமுக: ப்ரவிவிக்தபுக் தைஜஸோ த்விதீய: பாத: ||**

ஆத்மாவினுடைய இரண்டாவது பகுதி இங்கு கூறப்படுகின்றது. சூக்ஷும பிரபஞ்சத்திற்கு ஸ்வப்ன பிரபஞ்சம் என்று பெயர் கொடுத்துள்ளோம்.

இந்த சூக்ஷும பிரபஞ்சத்தையும் மூன்றாக பிரிக்க உள்ளோம்.

அவைகள்,

1. ஸ்வப்ன பிரமாதா
2. ஸ்வப்ன பிரமாணம்
3. ஸ்வப்ன பிரமேயம். என்பனவாகும்.

இதில் பிரமாதா என்றால் கனவில் அறிபவன், பிரமாணம் என்றால் கனவில் அறிவைக் கொடுக்கும் கருவி, பிரமேயம் என்றால் கனவில் அறியப்படும் பொருள் ஆகும்.

கனவு நிலையில் அகஉணர்வை அனுபவிப் பவனும், ஏழு உறுப்புகளும், பத்தொன்பது வாய்களும்

உள்ளவனும். மன உலகை அனுபவிப்பவன் இரண்டாம் பரிமாணமான **தைஜஸன்** ஆகிறான்.

ஆத்மாவும், சூக்ஷும பிரமாதா, மற்றும் சூக்ஷும பிரமாணம் இரண்டும் சேர்ந்த தத்துவம் **“தைஜஸன்”** என்று அழைக்கப்படுகின்றது.

ஆத்மாவும், ஸ்வப்ன பிரமேயமும் சேர்ந்து பார்த்தால் **“ஹிரண்யகர்பன்”** ஆகின்றது. சூக்ஷும பிரபஞ்சத்தை அபிமானம் செய்கின்ற ஆத்மாவுக்கு ஹிரண்யகர்பன் என்று பெயர். இங்கும் தைஜஸனும், ஹிரண்யகர்பனும் ஒன்றாக எடுத்துக் கொள்ளப் படுகின்றது.

**பதவுரை:**

**-------------**

தைஜஸ: - தைஜஸன் [என்ற]; த்3விதீய: பாத3: - இரண்டாம் பகுதியானவன்; ஸ்வப்னஸ்தான: - கனவில் நிலைபெற்றவன்; அந்த: ப்ரக்ஞ: - உள்ளுணர்வானவன்; ஸப்தாங்க: - ஏழு உறுப்புகளால் ஆனவன்; ஏகோநவிம்ஸதிமுக2: - பத்தொன்பது வாய்கள் படைத்தவன்; ப்ரவிவிக்தபு4க் — நுண்ணுணர் வால் அறியப்படும் பொருள்களை அனுபவிப்பவன்.

**விளக்கம்:**

**--------------**

கனவு நிலையும் விழிப்பு நிலையைப் போன்றதே, ஒரே வித்தியாசம், இங்கே புறவுலகம் இல்லை, அனுபவங்கள் அத்தனையும் மன உலகிலேயே நிகழ்கிறது.

உடம்பும் மனமும் கருவிகள். அவற்றிற்கு ஓய்வு தேவை. உடம்பு ஓய்வெடுப்பது தூக்கம் எனப்படுகிறது. அப்போதும் மனம் தொடர்ந்து செயல்படுகின்றது.

விழித்துக்கொண்டிருக்கும்போது நாம் வெளி உறுப்புக்களான கண், காது, மூக்கு வாய்களால் பார்த்து, கேட்டு, நுகர்ந்து, சுவைத்து அறிகிறோம் - நமக்குள் இருக்கும் ஆத்மன் அறிகிறான்.

உறங்கும்போது, வெளியுறுப்புக்கள் வேலை செய்வதில்லை.இதன் பொருள் உணர்வு மனம் தூக்கத்தில் ஆழ்கின்றது, ஆனால் ஆழ்மனம் விழித் திருந்து ஒரு புதிய உலகை உருவாக்குகின்றது. அதுவே கனவு.

எனவே, கனவுலகில் ஆத்மன் அனுபவிப்பது எல்லாமே நுண்ணறிவால்தான்.

உதாரணமாக, கனவில் ஒருவன் பயணிக்கலாம். ஒரு வினாடிக்குள் அவன் உலகத்தின் ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடிக்குச் சென்று விடலாம். நனவுலகில் கற்பனையாக இருக்கும் அது, கனவுகில் ஒரு நிஜம்போலத் தோற்றமளிக்கிறது.

நனவுலகில் வெளி உறுப்புகள் மூலம் உணரப்படும் அனைத்தும், கனவுலகில் நுண்ணு ணர்வாக அறியப்படுகின்றன. ஆயினும் உடல் எந்த மாற்றத்திற்கோ உட்படுவதில்லை.

கனவில் நம்மை ஒரு மிருகம் கடித்துக் குதறலாம், ஆனால் உடலில் எந்த வலியும் ஏற்படுவ தில்லை. வெளியுலகில் நடக்கும் அனைத்தையும் ஆத்மன் கனவுலகிலும் அனுபவிக்க இயலுவதால், நனவுலகில் சொல்லப்பட்ட அத்தனை உறுப்புகளும், வாய்களும் தைஜஸனுக்கு இருப்பதாகச் சொல்ல படுகிறது.

கனவில் காண்பது அனைத்தும் மனத்தாலேயே காணப்படுகிறது, கேட்கப்படுகிறது, உணரப்படுகிறது. அவை வெளி உலகத்தின் பதிவுகளே!

தைஜஸன் - அதாவது, ஒளிமயமானவன் என்று ஏன் அழைக்கப்படுகிறான்?

அவன் சாட்சியாக அனைத்தையும் அறிதல் சாத்தியம், திடப்பொருள்களாக அல்ல - ஒளிரும் வடிவங்களாகவே வைஸ்வானரன் வெளியில் காணும் திடப்பொருள்களை அறிந்தால், தைஜஸன் எண்ணங் களாகவும், பதிவுகளாகவுமே அறிகிறான்.

ஆதலால் அவனது அனுபவங்கள் நுட்பமாக, சூட்சுமமாகவே இருக்கின்றன.

ஆத்மனின் மற்ற இரண்டு பரிமாணங்கள் என்ன? அவன் எப்படி அறிகிறான்? எப்படி உணர்கிறான், எதை, எப்படி அனுபவிக்கிறான்?



(5) **யத்ர ஸுப்தோ ந கஞ்சன காமம் காமயதே ந கஞ்சன ஸ்வப்னம் பச்யதி தத் ஸுஷுப்தம் ஸுஷுப்தஸ்தான ஏகீபூத: ப்ரக்ஞானகன ஏவாநந்தமயோ ஹ்யானன்தபுக் சேதோமுக: ப்ராக்ஞஸ்த்ரீதீய: பாத:**

ஆத்மா ஆழ்ந்த உறக்கத்தில் காரண சரீரத்தின் மீது அபிமானத்தைக் கொண்டு அஞ்ஞானத்தையும், ஆனந்தத்தையும் அனுபவிக்கின்றது.

இவ்வாறு ஒவ்வொரு பகுதியிலும் நாம் பார்த்து வருகின்ற ஆத்மாவுக்கு விழிப்பு நிலையில் **“விஸ்வன்”** என்ற பெயரும், ஸ்தூல பிரபஞ்சத்தை அபினாம் செய்கின்ற ஆத்மாவுக்கு **“விராட்”** என்ற பெயரும், கனவு நிலையில் இதே ஆத்மாவுக்கு **“தைஜஸன்”** என் பெயரும், சூக்ஷும பிரபஞ்சத்தை அபிமானம் செய்கின்ற ஆத்மாவுக்கு **“ஹிரண்யகர்பன்”** என்ற பெயரும் கொடுக்கப்பட்டுள்ளதைப் பார்த்தோம்.

தற்பொழுது ஆழந்த உறக்க நிலையில் உள்ள ஆத்மாவுக்கு இந்த ஐந்தாவது மந்திரத்தில் **“பிராஜ்ஞன்”** என்ற பெயரும், ஆறாவது மந்திரத்தில் காரண பிரபஞ்சத்தை அபிமானிக்கின்ற ஆத்மாவுக்கு **“அந்தர்யாமி”** அல்லது **“ஈஸ்வரன்”** என்ற பெயரும் கொடுக்கப்படுகின்றது.

இங்கு **பிரமாதா, பிராமாணம், பிரமேயம்** என்ற மூன்றும் (திரிபுடி) ஒன்றாகி விடுகின்ற காரணத்தினால் இங்கு பேதம் இல்லை.

இந்த சுஷுப்தி அவஸ்தையில் காரண சரீரத்தில் உள்ள ஆத்மா நான் என்று அபிமானிக்கின்றதின் வாயிலாக கிடைக்கின்ற அனுபவம் ஆகும்.

நம்முடைய ஆழ்ந்த உறக்கத்தில் ஸ்தூல பிரபஞ்சத்தையும், சூக்ஷ்ம பிரபஞ்சத்தையும் அனுபவிக்காத நிலையில் மட்டுமே நாம் ஆழ்ந்த உறக்க நிலையில் இருக்கின்றோம்.

ஆனால், நம்மிடையே ஆத்ம அஞ்ஞானம் (ஆத்மாவைப்பற்றிய அறியாமை) ஆழ்ந்த உறக்க நிலையிலும் இருக்கும்.

இந்த ஆத்மாவைப்பற்றிய அறியாமை நமக்கு ஸ்தூல பிரபஞ்சத்தின் மீது அபிமானம் கொண்டு, ஸ்தூல சரீரமான விழிப்பு நிலையில் இருக்கும் பொழுதும், சாஸ்திரத்தை கற்று ஆத்மாவை அறிந்து கொள்ளுகின்றவரை அரியாமை இருக்கும்.

இந்த அஞ்ஞானம் அனைவரின் பரம்பரை சொத்து.

இதுப்போன்றே, ஆத்மாவைப்பற்றிய அறியாமை சூக்ஷும பிரபஞ்சத்தின் மீது அபிமானம் கொண்டு, சூக்ஷும சரீரமான கனவு நிலையிலும் நிச்சயமாக இருக்கும்.

எங்கு தன்னறிவில்லாதவன் அவனது ஆழ்ந்த உறக்கத்தில் ஒன்றையும் விரும்புவதில்லையோ, ஒரு கனவையும் காண்பதில்லையோ, அந்த ஆழ்ந்த உறக்கநிலையை **சுஷுப்தி** என்கின்றோம்.

ஆழ்ந்த உறக்கநிலையில் [இருக்கும் ஆத்மன்] ஒன்றாகவே ஆனவனாகவும், அறிவின் குவியலாகவும், ஆனந்தமே வடிவாகவும், ஆனந்தத்தை அனுபவிப்ப வனாகவும், அறிவே முகமாவும் [கனவுக்கும், நினைவுக்கும் பாலமாக], அறிவாளியாகவும் உள்ளான்.

அதாவது ஆசைகளோ, கனவுகளோ ஏதுமின்றி ஆழ்ந்து தூங்குகின்ற நிலை ஆன்மாவின் மூன்றாம் பரிமாணம் ஆகும் இந்த நிலையை அனுபவிப்பவன் பிராஜ்ஞன் ஆகிறான்.

**பதவுரை:**

--------------

யத்ர - எங்கு; ஸுப்த: - [ஆழ்ந்து உறங்கும்] தன் நினைவு இல்லாதவன்; காமம் கஞ்சன ந காமயதே - ஆசைப்படு[ம் பொருள்களில்]தலில் சிறிதும் விருப்பபடுவதில்லையோ; ஸ்வபனம் கஞ்சன ந பஸ்யதி - கனவுகள் சிறிதும் காண்பதில்லையோ; தது - அது; ஸுஷுப்தம் - ஆழ்உறக்கநிலை [ஸுஷுப்தம் ஆகிறது]; ப்ராக்ஞ: - அறிவாளியான [ஆத்மன்]; ஸுஷுப்தஸ்தா2ன - ஆழ்உறக்கநிலையில்; ஏகீபூ4த: - ஒன்றாகவே [எதிலிருந்தும் வேறுபடாமல்] இருக்கிறான்; ப்ரக்ஞானக4ன ஏவ; - [அனைத்து] அறிவின் குவியலாகவே; ஆநந்த3மய: ஹி - ஆனந்தத்தின் உருவமாகவே; ஆனன்த3பு4க் - மகிழ்ச்சியைத் துய்ப்பவனாக;: சேதோமுக2: - அறிவையையே முகமாகவும்கொண்டு [கனவுக்கும் நினைவுக்கும் பாலமாக/கதவாக]; த்ரீதீய பாத3 - மூன்றாம் பகுதியாகிறான்.

**விளக்கம்:**

--------------

இந்த சுலோகத்தில் ஆழ்உறக்கநிலை, அல்லது ஸுஷுப்தி விவரிக்கப்படுகிறது.

இங்கே விழிப்பும் இல்லை, கனவும் இல்லை. விழித்திருக்காவிட்டாலும், கனவு காணாவிட்டாலும் அந்த ஆழ்ந்த உறக்க நிலையை நாம் அனுபவிக்கிறோம்.

ஏனெனில் தூங்கி எழுந்தவுடன் '**நேற்று நன்றாக தூங்கினேன்**' மிகவும் ஆனந்தமாக இருந்தது என்று கூறுகிறோம். இவ்வாறான தூக்க நிலையை அனுபவிக்கின்ற ஆன்மா **"பிராஜ்ஞன்"** எனப்படுகிறது.

மனிதன் உறங்கும்போது இருவிதமான உறக்க நிலைகளில் இருக்கிறானென்று அறிவியல் கூறுகின்றது.

கனவுகளுடன் கூடிய உறக்கத்தை REM (Rapid Eye Movement) sleep என்றும், கனவுகளில்லா உறக்கத்தை NREM (Non-Rapid Eye Movement) sleep என்றும் உறக்க வல்லுனர்கள் பிரித்திருக்கிறார்கள்.

மேலும், கனவில்லா உறக்கத்தில் எண்ணங்கள், நினைவுகள் இருக்கின்றன, ஆனால் அவை சிதறல்களாக இருக்கின்றன என்றும் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

இதையே மாண்டூக்ய உபநிஷத்து அறிவின் குவியல் என்று குறிப்பிடுகிறது.

அதுமட்டுமா, ஆழ்ந்த உறக்கத்தில் உடல் தன்னை பண்டை நிலைமைக்குத் திரும்பக் கொணர்கிறது என்றும் அறிவியல் கூறுகிறது.

கட்டற்ற மகிழ்ச்சி நிலையில் இருக்கும்போது உடல்நலம் தேறுகிறது என்பதை நாம் அறிவோம். ஆகவே, ஆழ்ந்த உறக்கத்தில் ஆனந்தமாக இருக்கும் போது உடல் அன்றாடம் ஏற்படும் தேய்மானத்தைச் சரிசெய்கிறது.

இன்னும் ஒன்று - ஆழ்உறக்க நிலையி லிருக்கும் போது ஆணவம் [ego] மறைகிறது. அங்கு ஐம்புலன்களின், ஐயுறுப்புகளின் தொடர்பும் தாற்காலிக மாக விட்டுபோகிறது. அங்கு நாம் மறைந்து விடுகிறோம் - நமது பெயர், நமது உள்ளறிவு, நமது விருப்பு, வெறுப்புகள், பகை, நட்பு, உறவுகள், சமயம், சாதி, மொழி, நாடு ஏழை செல்வந்தர் என்ற நினைப்பு, வலிந்தவர், மெலிந்தவர் என்ற இறுமாப்பு, ஆண், பெண் என்ற உணர்வு, - இவை எல்லாமே மறைந்துதான் போய்விடுகின்றன.

அப்படிப்பட்ட நிலையில் **“ஏகீபூ4த”**மாக, ஒன்றிப்போன நிலையில் இருக்கிறோம் என்பதே உண்மை.

நமது துயர்கள், இடுக்கண்கள், தேவையற்ற பூசல்கள் நாம் விழித்திருக்கும் போதும், கனவு காணும்போதும்தானே உண்டாகின்றன!

தூங்குபவருக்கு அது ஏது!

அந்த நிலையில் நாம் அடைவது ஆனந்தமான - மட்டற்ற மகிழ்ச்சி நிலைதானே….

ஆத்மனின் இந்நிலையை நம் மனத்தின் விழிப்புநிலை - விழித்திருக்கும்போது நாம் பெறும் பட்டறிவாகத் தோன்றும் அனுபவங்கள் - இவைதான் விழிப்புக்கும் கனவுநிலைக்கும் இடையே உள்ள கதவு என்றும் அறியலாம்.

மேலும் இந்நிலையில் இருக்கும் ஆத்மனை ஏன் சிறந்த அறிவாளி என்று கூறவேண்டும்?

விழித்திருக்கும் நிலையிலும், கனவுலகில் இருக்கும் நிலையிலும் ஆத்மனின் அறிவு மாறுபாட்டை உடையதாகவே இருக்கிறது.

அதாவது விருப்பு - வெறுப்புகள், பகை, நட்பு, உறவுகள், சமயம், சாதி, மொழி, நாடு, ஏழை - செல்வந்தர், உயர்ந்தவர் - தாழ்ந்தவர் என்ற நினைப்பு, வலிந்தவர், மெலிந்தவர் என்ற இறுமாப்பு, ஆண், பெண் என்ற உணர்வு, இவை எல்லாமே இருக்கின்றன.

ஸுஷுப்தி [ஆழ்உறக்க] நிலையில் இருக்கும்போது இந்த அறிவுக்கு எந்தவிதமான வேறுபாடுகளும் இல்லை. எல்லாமே ஒன்றுதான். ஆக அறிவு அறிவாகவே, மாறுபாடுகள் இன்றி, வெளிஉலக அனுபவங்களால் ஏற்பட்ட கலப்பு இல்லாமல் தூய அறிவாகவே உள்ளது. இப்படி இருக்கும் ஆத்மனை **"அறிவாளி"** என்றே **மாண்டூக்ய உபநிஷத்து** அறிவிக்கிறது.

இப்படி ஆழ்உறக்க நிலையில் இருக்கும் இந்த ஆத்மன் யார்?

(6) **ஏஷ ஸர்வேஸ்வர: ஏஷ ஸர்வக்ஞ**
**எஷோஅந்தர்யாம்யேஷ யோனி: ஸர்வஸ்ய**
**பிரப4வாப்யயௌ ஹி பூ4தானாம் ||**

இவர் எல்லாவற்றிற்கும் தலைவன், இவர் அனைத்தையும் அறிந்தவர், இவரே அனைத்து உயிர் களையும் உள்நின்று இயக்குபவன், அனைத்திற்கும் மூலக்காரணம் இவரே, தோற்றத்திற்கும், ஒடுக்கத் திற்கும் இவரே காரணம்.

**பதவுரை:**

-------------

ஏஷ - இவரே; ஸர்வேஸ்வர: - அனைத்துக்கும் இறைவன்; ஏஷ - இவரே; ஸர்வக்ஞ: - அனைத்தும் அறிந்தவர்; ஏஷ - இவரே; அந்தர்யாமி - உள்ளே இருந்து இயக்குபவர்; ஏஷ - இவரே; ஸர்வஸ்ய யோனி: - அனைத்துக்கும் உற்பத்தித்தானம்; பூ4தானாம் - உயிரினங்களுக்கேல்லாமே ; பிரபவ அப்யயௌ ஹி - தோற்றமும் முடிவுமாகவே [இருக்கிறார்].

**விளக்கம்:**

---------------

ஆழ்ந்த உறக்கநிலையில் இருக்கும் ஆத்மனின் சிறப்பியல்புகள் இச்செய்யுளில் விளக்கப்படுகின்றன.

இவர் அனைத்துக்கும் தலைவன், இவர் அனைத்தையும் அறிந்தவர், அனைத்துக்கும் பிறப்பிடமாக இருக்கிறார், அதுபட்டுமன்றி, அனைத் துயிர்களின் தோற்றமும், முடிவுமாக இருக்கிறார் என்று கூறப்படுகிறது.

ஆழ்ந்த உறக்க நிலை மேலும் இங்கு விளக்கப்படுகின்றது. புற உலகம், அதிலிருந்து நாம் பெறும் அனுபவங்கள், மன உலகம், அதிலிருந்து நாம் பெறும் அனுபவங்கள் ஆகியவைகள் சேர்ந்தே நமது வாழ்க்கை.

நான் - உணர்வு என்ற ஒன்று இருந்தால் மட்டுமே இந்த அனுபவங்களை நாம் பெற முடியும். உலகங்கள் எல்லாம் இருந்தாலும் நான் உணர்வு இல்லையென்றால் அனுபவங்கள் எதுவுமில்லை. அந்த நான் உணர்வுக்கு அடிப்படையாக இருப்பது தூக்க நிலையை அனுபவிக்கின்ற நமது மூன்றாம் பரிமாணமாகிய பிராஜ்ஞன் ஆகும்.

ஓர் உதாரணத்தினை காண்போம். காண்பவன் இருக்கலாம், எத்தனையோ அழகிய காட்சிகள் முன்னால் இருக்கலாம். ஆனால் ஒளி இல்லை யென்றால் எந்தப் பயனும் இல்லை. எனவே

**காண்பவன்**, **காட்சி** ஆகிய இரண்டிற்கும் அடிப்படை யாக இருப்பது ஒளிதான்.

அதுபோலவே உலகம், உயிர்கள், அறிவு ஆகிய எவ்வளவுதான் இருந்தாலும் ‘**நான்**’ என்ற ஒன்று இல்லாமல் அவற்றை அறியவோ, அனுபவிக்கவோ முடியாது.

அதனால்தான் இங்கே நான் உணர்வின் அடிப்படையான பிராஜ்ஞன் இத்தனை பெருமைகள் உடையதாக போற்றப்படுகின்றது.

ஒவ்வோர் உயிரிலும் தலைமை நிலையில் இருப்பவன் பிராஜ்ஞன்.

ஏனெனில் பிராஜ்ஞனின் செயல்பாடான நான் உணர்வு இல்லாமல் யாரும் எதையும் உணரவோ அனுபவிக்கவோ முடியாது.

இவ்வாறு அனைத்தையும் இயக்குபவனாக இருப்பதால் பிராஜ்ஞன் அனைத்திற்கும் தலைவன், அனைத்து உயிர்களையும் உள்நின்று இயக்குபவன். உலகம் இருக்கலாம், பல்வேறுவகை அறிவு இருக்கலாம். ஆனால் நான் உணர்வு இன்றி எந்த

அறிவையும் பெறவோ, பயன்படுத்தவோ முடியாது. அதனால் பிராஜ்ஞன் ‘**அனைத்தையும் அறிபவன்**’.

உலகமும் உயிர்களும் நதியும் கடலும் மலையும் இருந்தாலும் ‘**நான்**’ இல்லாமல் இவை எதனாலும் ஒருவனுக்குப்பயனில்லை.

இந்த உலகம் இருக்கிறது என்றால் அதற்கு என்னைப் பொறுத்தவரை நானே காரணம். ‘**நான்**’ இல்லாவிட்டால் ‘**எனக்கு**’ உலகம் இல்லை.

அதனால்தான் பிராஜ்ஞன் அனைத்திற்கும் மூல காரணம்.

விழிப்பு நிலையும் கனவும் எவ்வாறு நான் உணர்வில் ஒடுங்கி, அதிலிருந்தே மீண்டும் வெளிவருகின்றன என்பது இந்த மந்திரத்தில் கூறப்பட்ட கருத்து.

வாழ்க்கையே பிராஜ்ஞனில் ஒடுங்கி, மீண்டும் அவனில் வெளிப்படுவதாக உள்ளது. அதனால்தான் ‘**தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் இவரே காரணம்**’ என்று கூறப்பட்டது.

ஆழ்ந்த உறக்க நிலையில் இருக்கும் ஆத்மன் - அசைவின்றி, தூய அறிவாக, எண்ணங்களின் குவியலாக இருக்கும் ஆத்மன், மேற்சொன்ன தொழில்களை எப்படிச் செய்ய இயலும் என்ற கேள்வி பிறப்பது நியாயம்தானே!

நமக்குத் தெரிந்தவரை, ஜீவாத்மாவும் - உயிர்களுக்குள், உடலுக்குள் இருந்து நம்மை ஆட்டிவைக்கும் ஆத்மா என்று நம்மால் உணரப்படும் ஒன்றும் - இறைவனும் [பரமாத்வாவும்] வெவ்வேறு என்றே எண்ணுகிறோம்.

இந்த உபநிஷத்தைப் பொறுத்தவரை யாவும் ஒன்றே! ஒரே சத்தியமான ஒன்றேதான் இறைவன். அந்த இறைவனின் ஒரு பகுதியே ஆத்மன். அந்த ஆத்மனின் ஒரு பகுதியே - மூன்றாம் நிலையில் இருக்கும் ப்ராக்ஞனே பரம்பொருளான இறைவனின் ஒரு பகுதி என்று மாண்டூக்ய உபநிஷத்து உரைக்கிறது.

ஏனெனில் அனைத்துமே பரம்பொருள் என்று இரண்டாம் செய்யுளில் சொல்லப்பட்டது.

அந்த வகையில், உயிர்கள் [ஜீவாத்மா] அனைத்துமே இறைவனிடமிருந்து பிரித்தறிய இயலாதவை ஆகின்றன.

அது எப்படி இயலும்?

கடலில் இருக்கும் நீரில் ஒரு திவலையைத் தனியாகப் பிரித்தெடுத்தாலும், அதைக்கூறுபோட்டு ஒரு நீரணுவாகப் பிரித்தாலும், அது அக்கடலின் ஒரு பகுதியே!

எனவே, மாபெரும் கடலை இறைவன் என்றால், அக்கடலான இறைவனின் [பரம்பொருள் - பரப்பிரம்மம்] பிரிவுகளே அனைத்தும்.

ஹிரண்யகர்ப்பன் என்று அழைக்கப்படும் கனவு நிலையில் இருக்கும் ஆத்மனின் ஒரு பகுதியும், விராட் என்று சொல்லப்படும் நனவு நிலையில் இயங்கும் ஆத்மனின் ஒரு கூறும் ஆவார்கள்.

இந்த ஈசனே அனைத்துக்கும் முதன்மை யானவன். இவன் எங்கும் எதிலும் நிறைந்திருக்கிறான். இவன் அறியாததொன்றும் இல்லை; இவன் எல்லா உணர்வுகளையும் கடந்து - இருமை நிலைகளைக் கடந்து [இன்பம்-துன்பம்; மகிழ்வு-துயரம்; இனிமை-கடுமை] ஆனந்தநிலையில் லயித்திருக்கிறான்.

இதிலிருந்து நாம் இன்னொன்றையும் அறிந்து கொள்ளவேண்டி இருக்கிறது.

இறையறிவு பொருள்களை அறிவதால் ஏற்படுவதல்ல; உணர்ந்து அறிவதால் ஏற்படுவதல்ல; எந்தவொரு அறிவும், உணர்வும் அனைத்தறிவு ஆகாது.

நாம் வெளியுலகில் இருக்கும் எதை அறிந்து உணர்ந்தாலும், அவற்றின் தன்மையை அறிந்து கொண்டாலும், அவற்றின் மீது எப்பொழுதும் முழுக்க முழுக்க கட்டுப்பாட்டைச் செலுத்த இயலாது.

**“அறிவு சக்தி”** என்று சொல்லப்பட்டாலும், அது சக்தி ஆகாது. வெளி அறிவு - நமது ஐம்புலன் களினாலும் அறியப்படும் அறிவு - நமது ஐயுணர்வு களினாலும் அறியப்படும் அறிவு முழுச் சக்தியையும் நமக்கு வழங்குவதே இல்லை.

உயிர்கள் விழித்திருக்கும் நிலையில் இருக்கும்போது அதன் அறிவு ஐம்புலன்களினால் கிடைக்கும் ஒன்றே!

இறைவனின் அறிவு உள்ளுணர்வாகும்.

எனவேதான் அவர் கடவுள் - உள்ளத்தைக் கடந்தவர் என்று உள்ளப்படுகிறார்.

இறைவனிடமிருந்துதான் அனைத்தும் தோன்று கின்றன, அவனுள்ளேதான் அனைத்தும் அடங்கு கின்றன.

அவனின் சக்தியில் ஒருசிறு பங்கே நமக்குக் கிடைக்கிறது. அதைத்தான் நாம் நனவு உலகிலும், கனவு உலகிலும் கையாளுகிறோம்.

ஆழ்ந்த உறக்க நிலையில் அப்பரம்பொருளுடன் ஒன்றிவிடுகிறோம்.

அப்பொழுது நமக்கு எதுவும் தேவைப்படுவது இல்லை. அளவிட இயலாத ஆனந்த நிலையில் இருக்கிறோம்.

அந்த ஆழ்ந்த உறக்க நிலையில் கிடைக்கும் ஆனந்தத்தை ஆயிரம்கோடி பொற்காசுகளாலும் அடைய இயலாது.

உறக்கம் வராமல் விழித்திருக்க நம்மால் இயலுமா? ஆயிரம் கோடி பொற்காசுகள் தருகிறேன், ஒரு ஆண்டு உறங்காமல் இரு என்றால் இருக்க இயலுமா?

அந்த ஆழ்ந்த உறக்க நிலையில் நாம் இறைவனுடன் ஒன்றுகிறோம். இறைவனாகவே ஆகி விடுகிறோம்...

(7) **நாந்த:ப்ரக்ஞும் ந பஹிப்ரக்ஞும் நோபயத: ப்ரக்ஞும் ந ப்ரக்ஞான கனம் ந ப்ரக்ஞும் நாப்ரக்ஞும் |**
**அத்ருஷ்டமவ்யவஹார்யமக்ராஹ்யமலக்ஷணமசிந்த்யமவ்யபதேஸ்யமேகாத்மப்ரத்யயஸாரம் பிரபஞ்சோபஸ'மம் ஸா'ந்தம் சிவமத்வைதம் சதுர்த்தம் மந்யந்தே ஸ ஆத்மா ஸ விக்ஞேய: ||**

உள்ளறிவு உள்ளவனும் அல்ல, இடைப்பட்ட அறிவுள்ளவனும் அல்ல, அறிவுக்குவியலானவனும் அல்ல, விழிப்புணர்வு உடையவனும் அல்ல, விழிப்புணர்வு இல்லாதவனும் அல்லன். காண முடியாதவன், செயல்களுக்கு அடங்காதவன், பிடிக்க முடியாதவன், ஊகித்தறிய முடியாதவன், நினைத்துப் பார்க்க இயலாதவன், விளக்க முடியாதவன், ஒரே ஆத்ம நுண்ணறிவின் உட்பொருளானவன், அண்டமே அடங்கும் தன்மையன், அமைதியானவன், மங்களமானவன், இருமையற்றவன், நான்காம் பரிமாணமாகக் கருதப்படுபவன், அவனே ஆத்மன், அவனே அறியத் தகுந்தவன். - 7.

**பதவுரை:**

-------------

சதுர்த்த2ம் - நான்காம் பகுதியான [துரீயன்]; நாந்த:ப்ரக்ஞும் - உள்ளுணர்வு அற்றவன்; ந ப3ஹிஷ்ப்ரக்ஞும் - வெளி உணர்வு அற்றவன்; நோப4யத:ப்ரக்ஞும் - இடைப்பட்ட நிலை உணர்வுகளும் இல்லாதவன்; ந ப்ரக்ஞானக4னம் - அறிவுக் குவியில்களும் அல்லன்; ந ப்ரக்ஞும் - அறிபவனு அல்லன்; ந அப்ரக்ஞும் - அறியாதவனும் அல்லன்.

அத்3ருஷ்டம் - காண முடியாதவன்; அவ்யவஹார்யம் - வெளிச் செயல்களால் [அறிபவன்] அல்லன்; அக்ராஹ்யம் - பிடியில் அடங்காத[வண்ணம் நழுவிச் செல்ப]வன்; அலக்ஷணம் - ஊகித்து அறியமுடியாத[அளவுக்கு உயர்ந்திருப்ப]வன்; அசிந்த்யம் - நினைத்துப்பார்க்க முடியாதவன்; அவ்யபதே3ஸ்யம் - [சொற்களால்] விளக்க முடியாதவன்; ஏக ஆத்ம ப்ரத்யய ஸாரம் - ஒரே ஆத்ம நுண்ணறிவின் உட்பொருளானவன் பிரபஞ்ச உபஸ’மம் - அண்டத்தையே [தன்னுள் அடக்கி] ஒடுக்குபவன்; ஸா’ந்தம் - அமைதியே உருவானவன்; சிவம் — மங்களமானவன்; அத்3வைதம் - இருமை நிலையற்றவன் [என்று]; ஸ ஆத்மா - அந்த ஆத்மன்;

மந்யந்தே - கருதப்படுகிறான்; ஸ விக்ஞேய: - அவன் அறியத் தகுந்தவன்.

**விளக்கம்:**

**--------------**

என்ன இப்படிக் குழப்பம் செய்யப்படுகிறது?

முன்னால் ஆத்மனின் மூன்று பகுதிகள் என்று சொல்லி - வெளி உணர்வு, உள்ளுணர்வு, எல்லாம் அறிந்தவன் என்று சொல்லிக்கொண்டே வந்து - இப்பொழுது அதுவுமில்லை, இதுவுமில்லை, அறிவாளி, அதுவும் அல்ல, நினைத்துப் பார்க்க இயலாதவன் காணமுடியாதவன் என்றும் சொல்லி - முன் சொல்லிய மூன்று பகுதிகளும் இல்லாத பகுதியே நான்காம் பகுதி என்று குழப்பினால் - நாங்கள் என்ன, எப்படிப் புரிந்து கொள்வது என்பதுதான் அனைவரின் மனதிலும் எழும்பும் கேள்வி.

அது நியாயமானதுகூட.

ஆதிசங்கரரும் இதே கேள்வியை எழுப்பியே விளக்கத்தையும் அளிக்கிறார்.

இருட்டான இடம். நாம் நடந்து செல்லும்போது எதோ ஒன்று சுருண்டு படுத்திருக்கிறது. இது இலேசாகவும் ஆடுகிறது. உடனே நாம் அதிர்ந்து போகிறோம். இவ்வளவு பெரிய பாம்பு நமது வழியில் சுருண்டு படுத்துக்கிடப்பதோடு மட்டுமல்லாது தலையையும் இலேசாக ஆட்டுகிறதே!

நா உலர்கிறது, மதி மயங்குகிறது, அச்சம் நம்மைச் சூழ்கிறது. “பாம்பு! பாம்பு!” என்று பதறுகிறோம்.

நம் அருகில் உள்ள ஒருவர், **“இல்லை, இல்லை! அது ஒரு மாலை! நீங்கள் தலை என்று நினைப்பது மாலையின் கீழ்ப்பகுதியில் உள்ள பூப்பந்து!”** என்கிறார்.

இதற்கிடையில், **“பாம்பா! எங்கு?”**

என்றபடி ஓடி வருகிறாள் ஒரு மூதாட்டி. அவள் கையில் ஒரு விளக்கு இருக்கிறது.



“பா.. பா.. பாட்டி! **அதோ!”** என்று பாம்பு இருக்கும் இடத்தைச் சுட்டிக்காட்டுகிறோம்.

இலேசாக வீசும் காற்றில் விளக்கின் சுடர் அணைந்து போகாதவாறு பிடித்துக்கொண்டிருந்த கையை எடுக்கிறாள் மூதாட்டி. அங்கே இருப்பது..…

நம்மையும் அறியாமல் நம் உதடுகள் பிரிந்து சிரிப்பு வெளி வருகிறது.



அங்கு இருப்பது பாம்பல்ல! சுருட்டி வைக்கப் பட்டிருக்கும் கயிறு. பாம்பின் தலையென்று நாம் நினைத்து கயிற்றில் போடப்பட்டிருந்த முடிச்சு.

முடிச்சு உள்ள அந்த நுனி காற்றில் ஆடவே, அதை பாம்பு தலையை ஆட்டுகிறது என்று தவறாக நினைத்திருக்கிறோம், நாம்!

ஆக, மூதாட்டியின் விளக்கு ஒளி இல்லா விட்டால், அது பாம்பாகத்தானே நம் கண்ணில் பட்டுக்கொண்டிருக்கும்!

கயிற்றைப் பாம்பாக நினைத்தது நமது வெளி அறிவு.

மூதாட்டியின் விளக்கின் ஒளி என்ற ஞானம் நம் மன இருட்டை அகற்றியவுடன் உண்மை தெரிகிறது.

எனவே, பாம்பும், மாலையும் கயிறும் ஒன்றுதான். அதைப் பாம்பாகவும், மாலையாகவும், கயிறாகவும் பார்ப்பது நமது பார்வையின் கோணங்களே!

இன்னும் கூர்ந்து கவனித்தால், அங்கு சிதறிக்கிடக்கும் தேங்காய் நார்களால் பின்னப்பட்டதே அந்தக் கயிறு என்றும் அறிவோம். அப்படியானால் தேங்காய் நாரும், கயிறும் ஒரே பொருளின் இரண்டு தோற்றங்கள்தானே!

அதைத்தான் வேதமும், **“தத்துவம் அஸி! அதாவது, அது நீயாக இருக்கிறாய்!”** என்று எடுத்துரைக்கிறது.

ஆத்மன் நான்காம் பகுதியில் சொல்லப்படும்படி இல்லாவிட்டால், வேதங்கள் சொல்வதெல்லாம் [தத்வமஸ்ஸி] பொருளற்றதாக அல்லவா ஆகிவிடும்!

கயிறு பாம்பாகவும், முடிச்சு தலையாகவும், காற்றில் அது ஆடுவது பாம்பின் அசைவு போலத்

தோற்றமளிப்பதும், அதுவே இன்னொருவர் கண்ணுக்கு மாலையாகத் தோன்றுவதும் அவரவர் அறிவுக்குத் தகுந்த மயக்கம்தானே!

அதுபோலத்தான் ஆத்மனும் விழிப்பு, கனவு, ஆழ்உறக்க நிலைக்குத் தகுந்தவாறு தோற்றத்தைத் தருகிறான்.

பாட்டியின் விளக்கு ஒளி இருவிதப்பட்ட தோற்றங்கள் [பாம்பு, மாலை] தானாக அழிந்தொழிந்து போவது போல, அறிவு (ஞான) நிலையில் ஆத்மனின் மற்ற மூன்று தோற்றங்களும் தானாகவே மறைந்து போகின்றன.

அறியாமை அகன்று அறிவு தெளிந்த நிலையில் [அந்த ஞான நிலையை அடைந்தவுடன்] வேறெந்த அறிவோ, முயற்சியோ தேவைப்படுவதில்லை - ஏனெனில் அனைத்தும் தெளிவாகி விடுகிறது.

இருப்பினும் ஐயம் எழுகிறது என்றால்! ......

"பாம்பு, மாலை, கயிறு, தேங்காய் நார் எல்லாம் ஒன்றே என்று சொல்லிவிடலாம்; ஆயினும் ஆழ்ந்த உறக்கத்தில் நாம் அறிந்த எல்லாம் மறைந்து

போகின்றனவே! அப்படியென்றால் ஆழ் உறக்க நிலைக்கான ப்ராக்ஞனைப் பற்றி ஒன்றும் சொல்ல வில்லையே! ஆழ்உறக்கநிலையை யார் அறிவார்?" என்ற கேள்வி வைக்கப்படுகிறது.

இல்லவே இல்லை என்கிறார் ஆதி சங்கரர்.

எப்படி?

ஒரு சிறிய உதாரணத்துடன் விளக்குவோம்.

தொலைக்காட்சிப்பெட்டி அலறிக் கொண்டு இருக்கிறது. குழந்தைகள் விளையாட்டில் ஒருவரோடு ஒருவர் அடித்துக் கொண்டு உரக்க ஒலி எழுப்பு கிறார்கள். வீட்டில் இருப்பவர்கள் உரக்கப் பேசிக் கொண்டிறிருக்கிறார்கள்.

இதை எவற்றையும் பொருட்படுத்தாது கனவற்ற ஆழ்உறக்க நிலையில் ஒருவர் நிம்மதியாக உறங்கிக்கொண்டிருக்கிறார். இப்படி பேரிரைச்சலில் சோஃபாவில் உறங்குகிறாரே, படுக்கையில் படுத்து நிம்மதியாக உறங்கட்டும் என்று கரிசனத்துடன் எழுப்புகிறாள் அவரது மனைவி.

**“இந்த இரைச்சலில் எப்படி உங்களால் நிம்மதியாகத் தூங்க முடிகிறது? படுக்கையில் போய்ப் படுங்கள்!”** என்று அன்புடன் கடிந்துகொள்கிறாள்.

**“நான் அசந்து, ஆனந்தமாகத் தூங்கிவிட்டேன். இகலோகமோ, பரலோகமோ, எதுவுமே எனக்குத் தெரியவில்லை.”** என்று பதில் வருகின்றது.

தன்னுணர்வு இல்லாவிட்டால் - தன்னைச் சுற்றி நடப்பது எதுவும் தெரியாமலும், உறங்கும்போது தான் என்ற உணர்வு இல்லாமல் இருந்தும் - ஆழ்ந்து தூங்கினோம் என்று எப்படி உணரமுடியும்?

அந்தத் தன்னுணர்வு - ஆத்மனின் மூன்றாம் பகுதியான ப்ராக்ஞன்தானே - அந்த “ஆழ்ந்து உறங்கினேன்” என்ற முடிவை, ஒரு சாட்சியாக இருந்து கூறமுடியும்!

ஆனால் நான்காம் பகுதியானது அப்படி உணர முடியாது. அங்கு நான் என்ற உணர்வே இல்லை. அதனால்தான் அவர் காண முடியாதவன், எண்ணங் களால், நாம் வெளியுலகில் கண்டு அறிந்து, செயல் களால் உணர்ந்து அறியமுடியாதவன், வாதங்கள் மூலமோ, கல்வி மூலமோ அறிய இயலாதவன்.

அதே ஆத்மன்தான் விழித்திருக்கும்போது வைஸ்வானரனாகவும், கனவுலகில் ஒளிபொருந்திய தைஜஸனாகவும், ஆழ் உறக்கத்தில் எண்ணக் குவியலான, அனைத்தையும் அறிந்த ப்ராஜ்ஞனாகவும், எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட ஒரே பரம்பொருளின் - பரமாத்வாவின் - பிரம்மனின் {பிரம்மா அல்ல} - பொழிப்பாக, கருத்துரையாக, சாரமாக இருக்கிறான்.

[ஏக ஆத்ம ப்ரத்யய ஸாரம்]. இது மறை கூறும், **"அஹம் ஏவ ப்ரஹ்மன்; ப்ரஹ்ம ப்ராஹ்மைவ அஹமஸ்மி [நானே பரம்பொருள்; பரம்பொருளுக்கும் பரம்பொருளாக நான் இருக்கிறேன்]"** கூற்றை உறுதி செய்கிறது.

எல்லாவிதமான பண்புகளும், குணங்களும், கற்பிதங்களும், ஆத்மனின் மூன்று நிலைகளும், அவற்றின் **"உணர்வுகளின் நிலைப்பாடுகளும்"** துரீய நிலையில் மறுக்கப்படுவதால், துரீயனிடம் புலன்களால் உணரத்தக்க அனைத்தும் முடிவுறுகின்றன. அதைத்தான் நிர்குணப் பிரம்மம் என்று ஆன்றோர்கள் சொல்கிறார்கள்.

இந்நிலை அமைதியானது [சாந்தம்], இந்நிலை மங்களமானது [சிவம்], இந்நிலை உண்டு, இல்லை,

இடைப்பட்டது என்ற நிலைகள் எதுவும் இல்லாததால் இரண்டற்றது [அத்துவைதம்] என்று பகரப்படுகிறது.

அதனாலேயே இந்நிலை நான்காம் நிலை [துரீய, சதுர்த்த] என்று அறியப்படுகிறது. இந்நிலை மற்ற மூன்று தோற்ற {தோற்றம் அளிக்கும்] நிலைகளிலிருந்து தனித்தன்மை வாய்ந்தது. இதுவே ஆத்மன் [பரமாத்மா]!

இப்படிப்பட்ட ஆத்மனை, பரம்பொருளை, பிரம்மனை அறியவேண்டும் என்று நிறைவு செய்கிறது.

இனி இதே மாண்டுக்ய உபநிஷதம் எட்டாவது சுலோகத்திலிருந்து பனிரெண்டாம் சுலோகம் வரை ஓங்காரமே அனைத்தும் என்று விளக்கம் தருகின்றன.

(8) **சேஅயமாத்மாஅத்4யக்ஷரமோங்காரோ அதி4மாத்ரம் பாதா3 மாத்ரா மாத்ராஸ்'ச பாதா3 அகார உகாரோ மகார இதி ||**

இந்த ஆத்மனை ஒரு சொல்லால் குறிப்பிடவேண்டு மென்றால் அதுவே **"ஓம்"** எனும் ஓங்காரம்.

எழுத்துக்களாகச் சொல்ல வேண்டுமானால் அதன் பகுதிகளே எழுத்துக்கள், எழுத்துக்களே பகுதிகள். அந்த ஓங்காரம் **‘அகாரம்’ ‘உகாரம்’ ‘மகாரம்’** என்னும் எழுத்துக்களால் ஆனது. - 8.

**பதவுரை:**

-------------

அயம் - இந்த[இப்படிப்பட்ட]; ஸ: - அவன்; ஆத்மா - ஆத்மன்; அத்4யக்ஷரம் - மேற்சொன்ன அழிவற்ற [சொல்லான]; அதி4மாத்ரம் - மேற்சொன்ன எழுத்துக்களான; ஓங்காரம் - ஓம் என்னும் ஒலி; மாத்ரா பாதா3: - எழுத்துக்களே பாதங்கள்; அகார உகார மகார இதி - அ, உ, ம் என்னும் ஒலிகளான ; மாத்ராஸ்’ச - எழுத்துக்களும் ; பாதா:3 - கால்கள்.

**விளக்கம்:**

--------------

ஓங்கார மந்திரத்தினை இரண்டு கோணங்களில் காண்கிறது இந்த உபநிஷதம். ஒன்று, முதல் மந்திரத்தில் கண்டது போல் சென்றவை, இருப்பவை, வருபவை என்று அனைத்தின் மொத்தமாகவும், காலங்களைக் கடந்ததாகவும் இருக்கின்ற பொருள்.

அதாவது ஓம் எனப்படுவது, '**அ**', '**உ**', '**ம்**' என்ற மூன்று எழுத்துக்கள் அடங்கிய சொல்லே ஆகும்.

**அ+உ+ம் = ஓம்** என்று வாயைத்திறக்கும் போதே '**அ**' உச்சரிக்கப்பட்டு விடுகிறது. '**ம்**' என்ற உடன் வாய் மூடப்படுகிறது. அதன் பிறகு எந்த வார்த்தையையும் உச்சரிக்க முடியாது. எனவே அனைத்து வார்த்தைகளின் மொத்தமாக ஒரு மந்திரமாக அமைந்துள்ளது **ஓம்**.

**ஓம்** என்னும் இந்த மந்திரமே மற்ற பிற மந்திரங்களுக்கு மூலமாகும். இதுதான் எதற்கும் தோற்றுவாய். இதை வடமொழியில் பீ3ஜ [விதை] மந்திரம் என்று சொல்வார்கள்.

இது வேதங்களாயினும், தந்திரங்களாயினும் சரி, அனைத்துக்கும் மூலமானது.

ஆன்மீகத்திற்கு வருமுன் அறிவியல்கொண்டு ஓம் ஏன் அனைத்துக்கும் மூலமாக அமைகிறது என்று பார்ப்போம்.

'**அ**' என்ற ஒலியை எழுப்புவதற்கு நமது வயிற்றிலிருந்து எழும் 'உதானன்' என்னும் காற்று,

கழுத்தை அடைந்தவுடன் வாய் மெல்லத் திறக்கிறது. உதானனான காற்று சிறிது வெளியேறியவுடன் **'அ'** என்ற ஒலி பிறக்கிறது. அதுவே முதல் ஒலி. அதைத்தான் மாண்டூக்கிய உபநிஷத்து ஓங்காரத்தின் முதல் கால் என்று இயம்புகிறது.

முயற்சியுள் ***அஆ*** அங்காப் புடைய - (நன்னூல்: பா 76)

அடுத்தபடியாக **'உ'** என்ற ஒலியை உன்னிப்பாகக் கவனிப்போம்.

அதற்கும் வயிற்றிலிருந்து வரும் காற்று உதடுகள் குவிந்து வாய் வழியாக வெளியேறுவதனால் அவ்வொலி பிறக்கிறது.

***உ ஊ ஒ ஓ ஔ*** இதழ் குவிவே - (நன்னூல்: பா 78)

**'ம்'** என்ற ஒலி எழும்போது வாய் திறப்ப தில்லை; மாறாக மூடிக்கொள்கிறது. தலையில் ஒருவித அதிர்வு உண்டாகிறது. அது ஒங்காரத்தின் மூன்றாவது கால் ஆகிறது.

மீ கீழிதழுறப் பம்மப் பிறக்கும் - (நன்னூல்: பா 81)

**‘அகர முதல எழுத்தெல்லாம்’** என்னும் குறள் கூறுவதுபோல எந்த ஒரு மொழியை எடுத்துக் கொண்டாலும், அதனை ஒலிக்கும் முதல் முயற்சிக்கு நமது உயிர்க்காற்றான உதானன் நமது வயிற்றிலிருந்து வெளியேறி, திறந்த வாயின் மூலம் வெளி வருவதாலே ‘அ’ பிறக்கிறது.

**‘அ’** வுக்கும் **‘உ’** வுக்கும், **‘ம்’** மிற்கும் இடைப்பட்ட ஒலிகளே எந்த ஒரு மொழியின் ஒலிகளாக இருக்க இயலும்.

**‘ம்’** என்று வாயை மூடியபின் ஒலிகள் இல்லை. ஒலிகள் இல்லையேல் மொழிகள் இல்லை. மொழிகள் இல்லையேல் கருத்துப் பரிமாற்றம் இல்லை. கருத்துப் பரிமாற்றம் இல்லையேல் எந்தச் செயல்பாடும் இல்லை.

இது மனிதர்களுக்கு மட்டும் அல்ல, விலங்குகளுக்கு மட்டுமல்ல, இவ்வண்டத்தில் இயங்கும் எதற்கும் பொதுவானதே.

இயந்திரங்கள் இயங்கும்போது எழும் ஒலி, சக்கரங்கள் சுழலும்போது எழும் '**ம்**' என்ற பேரொலி, எப்படிப்பட்ட மொழியில் இருந்து பேசினாலும் தூரத்தில் இருந்து கேட்கும்போது இரைச்சலாகக் காதில் விழும் ஒலி '**ம்**' ஆகத்தான் இருக்கும்.

புயற்காற்று சுழற்றி அடிக்கும்போது நாம் கேட்கும் '**உய்**' என்ற ஒளியின் முதலெழுத்து '**உ**'.

தனிமையில் அமர்ந்து நாம் நம்மைச் சுற்றிக் கேட்கும் ஒலி ஓங்காரத்தின் முடிவாகவே இருக்கும்.

அதற்கும் மேலே சென்றால், ஓம் என்பது ஒரு ஒலியோ, மொழிகளின் சுருக்கமான வடிவமோ, எல்லா மந்திரங்களிக்கும் மூலமோ மட்டும் அல்ல, இதற்கும் மேலான ஒன்று. அது தனித்து நிற்பது, தானாக இருப்பது, அது இயலுலக அண்டத்தின் அதிர்வாகும் [cosmic vibration].

நாம் எதையும், எவற்றையும், அனைத்தையும் பெயரிட்டே அழைக்கிறோம். இறைவனுக்கும் பல விதமான பெயர்களைச் சூட்டியே துதித்து வழி படுகிறோம்.

அதுபோலவே ஓம் என்னும் சொல்லும், இறைவனின் பெயரைப்போலவே, இறைவனை விளக்குகிறது. அதன் தனித் தன்மையால் இறைவனை ஆழ்ந்து நினைக்க, தியானம் செய்ய சக்தி கொடுக்கிறது.

உபநிஷத்தின் முதலில் **'ஓம்'**தான் எல்லாம் - அதுவே ஆனது, ஆக்குவது, ஆகப்போவது எல்லாமே, - முக்காலத்தையும் கடந்தது - ஓம்தான் இறைவன் [பரம்பொருள், பிரம்மம்] என்று சொல்லப்பட்டது.

எனவே, **ஓம்** பரம்பொருளின் பெயர் என்று அறியப்பட்டது.

பின்னர் பரம்பொருளான இறைவனே ஆத்மன் என்றுரைத்து, ஆத்மன் நான்கு பகுதிகளாக இருக்கிறான் என்றும், அவை என்னென்னவென்றும் விளக்கப்பட்டது.

ஓம்தான் ஆத்மன் என்று பொருள்கொண்டதால், ஆத்மனைப் பற்றிய விளக்கம் தரப்பட்டது.

இப்பொழுது ஓம் என்பதைச் சொல்லாக எடுத்துக் கொண்டு அந்தச் சொல்லின் வடிவம் எந்த எழுத்துக்களால் ஆகியது எனக் காட்டப்பட்டது.

மிகவும் ஆய்ந்து அறியும் உண்மைகளை - ஒன்றன்மேல் ஒன்றாக மூடிமறைக்கும் புலனறிவாலும் நனவு, கனவு, ஆழ்உறக்க நிலைகளால் ஏற்படும் மயக்கத்தாலும் அறிய இயலாது என்ற காரணத்தாலேயே **"ஓம்"** என்று அழிவற்ற ஒன்றை மட்டுமே யாவுங்கடந்த மெய்மையின் வடிவமாக உணர வேண்டும் என்று உரைக்கப்படுகிறது...

(9) **ஜாக்ரிதஸ்தா2னோ வைஸ்'வாநரோஅகார: ப்ரத2மாமாத்ரா ஆப்தேராதி3மத்வாத்3வாப்வாப்னோதி ஹ வை ஸர்வான் காமானாதி3ஸ்ச ப4வதி ய ஏவம் வேத ||**

[எங்கும்] நிறைந்திருப்பதாலும், முதலிலிருப் பதாலும், விழித்திருக்கும் நிலையிலுள்ள வைஸ்வா னரனே முதலெழுத்தான [ஒலியான] அகார மாகிறான். எவன் இதை அறிகிறானோ அவன் எல்லா விருப்பங்களையும் அடைந்து, முதன்மையானவன் ஆகிறான். - 9.

**பதவுரை:**

------------

ஆப்தே: - [எங்கும்] நிறைந்திருப்பதாலும்;; ஆதிமத்வாது3 - முதன்மையாக இருப்பதாலும்; ப்ரதமா மாத்ரா - முதல் ஒலியான [எழுத்தான]; அகார: - ஆகாரமாக [அ என்னும் ஒலியாக]; ஜாக்ரிதஸ்தா2ன; - விழிப்பு நிலையிலிருக்கும்; வைஸ்வாநர: - ஓவைஸ்வாநரன் [ஆகிறான்]; ய:: - எவன்; ஏவம் வேத - இவ்வாறு அறிகிறானோ; ஸர்வானு காமானு - அனைத்து விருப்பங்களையும்; ஹ வை ஆப்நோதி - நிச்சயம் அடைகிறான்; ஆதி3ஸ்'ச - முதன்மையானவனும்; ப4வதி - ஆகிறான்.

**விளக்கம்:**

-------------

ஓம் என்னும் மந்திரத்தின் முதல் ஒலியான '**அ**' வுக்கும் ஆத்மனின் முதல் பகுதிக்கும் உள்ள தொடர்பு இங்கு சொல்லப்படுகிறது.

உபநிஷத்தின் மூன்றாவது சொற்றொடரில் ஆத்மனின் முதல் பகுதியான - விழித்திருக்கும் - அதாவது நனவு நிலையில் செயல்படும்

வைஸ்வானரனே ‘அ’ என்னும் ஒலி என்று தெரிவிக்கப்படுகிறது.

எதனால்?

‘அ’ காரம் ஓமின் முதல் எழுத்து. வைஸ்வாநரன் ஆத்மனின் முதல் பகுதி.

அதுசரி, முதல் எழுத்து, முதல் பகுதி என்பதெல்லாம் சரிதான். இதைத்தவிர வேறென்ன விளக்கம் எனற கேள்வி நமது மனத்தில் எழுகிறது.

உடனே அதற்கு விடை கொடுக்கப்படுகிறது: எங்கும் நிறைந்திருப்பதாலும் என்பதே அது.

அது எப்படி?

நாம் [ஆத்மன்] விழித்திருக்கும்போது எங்கும் நிறைந்திருக்கும் இவ்வண்டம் நமக்குப் புலப்படுகிறது.

எல்லா அறிவுகளும் நமது ஐம்பொறிகளாலும் [கண், காது, மூக்கு, வாய், தொடும் உணர்வைத்தரும் உடற்பகுதி], ஐம்புலன்களாலும் [பார்வை, கேட்டல்,

நுகர்தல், சுவைத்தல், உணர்தல்] நமக்கு வந்து சேருகின்றன.

தனி மனிதராக நம்மால் இவை அனைத்தையும் அறிந்து கொள்ள இயலாவிட்டாலும், அண்டத்தில் இங்கெங்கெனாதபடி எங்கும் பரவி இருக்கும் திட, திரவ காற்றுப் பொருள்களாக இருக்கும் அனைத்தையும், பலகோடி, நூறுகோடி உயிரினங்களாக இருந்து அறிந்து கொள்கிறோம்.

மேலும், ஒலியே அறிவு. அந்த ஒலி மொழியாகப் பரிணமிக்கிறது. மொழி தோன்றுவதற்குக் காரணமாக நாம் வாயைத் திறக்கும்போது முதலில் கிளம்பும் ஒலி **‘அ’** தான். அதுதான் முதல் உயிர் ஒலி, முதல் உயிரெழுத்து. அதைத்தான் வள்ளுவர் பெருமான் **“அகர முதல எழுத்தெல்லாம்”** என்று திருக்குறளைத் துவங்குகிறார்.

காளிதாசனும் **“சொல்லும் பொருளும்போல இணைந்திருப்பவர்கள் [வாகர்த்தாவிவ சம்ப்ருக்த்தௌ]”** என்று இறைவனையும், இறைவியையும் வணங்கித் தனது ரகுவம்ச மகாகாவியத்தைத் துவங்குகிறான்.

இப்படிச் சொன்னவுடனேயே இதை எவன் அறிகிறானோ, அவன் எல்லா விருப்பங்களையும்,

முதன்மை நிலையையும் அடைகிறான் என்றும் உபநிஷத்து சொல்கிறதே, இப்பொழுது நாம் அகாரம்தான் வைஸ்வாநரன் என்று அறிந்து கொண்டோமே.

நமது விருப்பங்கள் நிறைவேறுமா என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா?

இப்படிக் கேட்பதும், **“நிலத்தை தோண்டினால் தண்ணீர் கிடைக்கும், அதை அறிபவனுக்கு எல்லாச் செல்வங்களும் கிடைக்கும்!”** என்று எழுதியிருப்பதைப் படித்துவிட்டு, **“எங்கே செல்வம்?”** என்று கேட்பதைப் போலத்தான்.

குழப்பமாக இருக்கிறதா?

இதில் குழப்பம் எதுவும் இல்லை.

நிலத்தைத் தோண்டினால் தண்ணீர் கிடைக்கும். எனவே, முதலில் எங்கு தோண்டினால் தண்ணீர் நிறையக் கிடைக்கும் என்று அறியவேண்டும்.

அதற்குப் பிறகு தோண்டுவது எப்படி, அதற்கு என்ன கருவிகள் தேவை, எவ்வளவு ஆழம்

தோண்டவேண்டும், தோண்டியபிறகு கிடைக்கும் தண்ணீரை எப்படி வெளிக்கொணர்வது, அதை எப்படிச் சேமிப்பது, அதனால் எவற்றை விளைவிக்கலாம் என்று தெரிந்து கொள்ளவேண்டும்.

அதன் பிறகும் தண்ணீரின் இதர பல பயன்களை அறிந்து அதற்கேற்பப் பயன் படுத்தினால், பயிர்கள் விளையும், விடுகளைக் கட்டத் தண்ணீர் பயன்படும், நாம் உணவு சமைக்கத் தண்ணீர் உதவும் என்று பலப்பல விஷயங்களைத் தெரிந்து அதன்படி செயல்படுத்தினால் எல்லாச் செல்வங்களையும் அடையலாம்.

அதைப்போலத்தான், அகரத்தை அறிபவன் அனைத்து விருப்பங்களையும் அடையலாம் எனபது.

நமது விருப்பத்தை அடைய, அதற்கான வழிகளை என்னவேண்டும்; எண்ணத்தை வெளியிட, அதை மற்றவர்கள் மூலமோ, இணைந்தோ செயல்படுத்த மொழி வேண்டும். மொழிதான் ஒரு குமுகத்தின் இணைப்புப் பாலம். குமுகம் மட்டுமல்ல, செயல்படும் அனைத்தின் இணைப்புப் பாலமும் கூட.

மொழி ஒலியாகத்தானே வெளிவருகிறது!

அந்த ஒலியின் முதல் '**அ**'தானே! அந்த '**அ**'காரமே மிகச் சுருக்கமாக '**அ**'காரத்தை அறிந்தவன், விஸ்வாநரன் என்று சொல்லப்படும், விழித்திருக்கும் நிலையில் உள்ள ஆத்மனின் முதல் பகுதியை அறிந்தவன், அதற்கேற்பச் செயல்பட்டால் [நனவு நிலையில்] விருப்பப்பட்டதை அடையலாம் என்று பூடகமாகச் சொல்லுகிறது உபநிஷத்து.

(10) **ஸ்வப்னஸ்தானஸ்தைஜஸ உகாரோ த்விதீயா மாத்ரோத்கர்ஷாதுபயத்வாத்வோத்கர்ஷதி ஹ வை ஞானஸந்ததிம் ஸமானஸ்ச பவதி நாஸ்யாப்ரஹ்மவித்குலே பவதி ய ஏவம் வேத ||**

கனவு நிலையில் இருக்கும் தைஜஸன் இரண்டாம் ஒலியான [எழுத்தான] 'உ'காரமாக உயர்ந்த நிலையிலும், இடைநிலையிலுமே இருக்கிறான். யார் இவ்வாறு அறிகிறானோ அவன் ஞான வழிமரபை உயர்த்துகிறான். சமமானவனாகவும் ஆகிறான். அவனது வழித்தோன்றல்களில் பரம்பொருளை [பிரம்மத்தை] அறியாதவர்கள் இருக்கமாட்டார். - 10.

**பதவுரை:**

------------

ஸ்வப்னஸ்தான: - கனவுநிலையில் இருக்கும்; தைஜஸ: - தைஜஸன்; த்விதீயா மாத்ரா - இரண்டாம் ஒலியான [எழுத்தான]; உகார: - உகாரமாக [அ என்னும் ஒலியாக]; உத்கர்ஷாது - உயர்ந்தவனாகவும்; உபயத்வாது ஹ வை - இடையில் இருப்பவனாக்கவுமே இருக்கிறான்; ய:: - எவன்; ஏவம் வேத - இவ்வாறு அறிகிறானோ; ஞான சந்ததிம் - ஞானவழி மரபை; உத்கர்ஷதி - உயர்த்துகிறான்; ஸமான: ச' - சமமானவனாகவும்; ப4வதி - ஆகிறான்; அஸ்ய குலே - அவனது வழித்தோன்றல்களில்; அ ப்ரஹ்மவித் - பரம்பொருளை [பிரம்மத்தை] அறியாதவர்; ந ப4வதி - இருப்பதில்லை.

**விளக்கம்:**

--------------

இரண்டாம் ஒலியான **'உ'** காரமானது உயர்ந்தவனும், இடைப்பட்டவனுமான ஆத்மனின் இரண்டாம் பகுதியான தைஜஸன் என்று உபநிஷத் உரைக்கிறது.

அத்துடன் இவ்வுண்மையை உணர்ந்து அறிபவன் ஞானவழி மரபை உயர்த்துவதோடு மட்டு மல்லாது, அனைவருக்கும் சமமானவன் என்றும் சொல்கிறது.

சமமானவர் என்றால் யார் என்று பார்ப்போம்.

சமம் என்றால் உயரத்திலா, எடையிலா, நிறத்திலா, அறிவிலா, திறமையிலா, செல்வத்திலா, மற்ற எதில் சமம்?

ஆத்மனே பரம்பொருள் என்றும், இருந்தது, இருப்பது, இருக்கப்போவது எல்லாமே ஓங்காரம்தான், ஓங்காரமே பரம்பொருள் என்றால் ஆத்மனின் பகுதிகளும் சமமாகத்தானே இருக்கவேண்டும்!

அதுமட்டுமா?

வெளியுலகில் அறிந்த அனைத்தும் கனவு நிலையில் நுண்ணறிவாகத்தானே புலப்படுகின்றன! அந்த ஒளிமயமான எண்ணப் பதிவுகளில் அனைத்தும் சமமே! எல்லா அறிவுகளும் அங்கு ஒன்றன்மேல் ஒன்றாக வந்து பதிகின்றன.

கனவுலகமே ஒரு ஒளிமயமான நூலகம். அங்கு எல்லா அறிவுகளும் உள்ளன. அறிவின் முன்னர் அனைத்தும் சமமே. ஏழை - பணக்காரன், ஆண் - பெண், பலசாலி - வலிமையற்றவன் என்ற வேறுபாடே கிடையாது. இவர்கள் அனைவரின் அறிவும் அங்கு நிறைந்துள்ளது. நினைவுகளின் முன்பு அனைவரும் சமமே. இந்த அறிவின் கருவூலமான தைஜஸன் அனைத்துக்கும் சமமானவன்.

ஞானவழி மரபை உயர்த்துபவன் என்றால்,

சந்ததி என்றால் ஒருவனுக்குப் பிறக்கும் குழந்தைகள் என்றுதானே பொருள், ஞானசந்ததி என்றால் அறிவுள்ள குழந்தைகள் என்றுதானே புரிந்துகொள்ளவேண்டும், ஞானவழி மரபு என்ற புதுப் பொருள் கொடுத்தால் எப்படி என்று கேள்வி எழலாம்.

ஒருவர் தன்னிடம் இருக்கும் அறிவை இன்னொருவருக்குப் புகட்டினால் புகட்டுபவர் புகட்டப் படுபவருக்குத் தந்தை/தாய் ஆகிறார். எனவேதான் ஆசானைத் தந்தை/தாய் என்றும் சொல்லப்படுகிறது.

இதெல்லாம் பத்தாம்பசலித்தனம், ஆசானாவது, தந்தை/தாயாவாது, இதெல்லாம் பேத்தல், அறிவுக்கு ஒவ்வாதது என்றுதான் இன்றைய அறிவியல் வாதிடும்.

நாம் ஒன்றைக் கற்றுக்கொள்ள விரும்புகிறோம், எனவே கல்விக்கூடங்களுக்கு கட்டணம் செலுத்து கிறோம்; அதில் ஒரு பகுதியைப் பெற்றுக்கொண்டு நமக்கு கல்வி கற்பிக்கிறார்கள். அதற்காக அவர்களை நமது பெற்றோருக்கு இணையாகக் கருதமுடியுமா? என்றுதான் கேள்வி வரும்.

இந்தக் கேள்வியெல்லாம் நான் காசு கொடுக்கிறேன், எனக்குக் கல்வி போதிக்கப்படுகிறது; எனவே, எனக்குக் கல்வி கற்பிப்பவர்கள் எனது வேலைக்காரர்கள் என்ற மனநிலையால் ஏற்படும் மயக்கமேயன்றி வேறொன்றுமில்லை.

எவ்வளவு செல்வம் கொடுத்தாலும் கல்வி தானாக வந்துவிடாது.

***ஆசான், மாணவர் இருவருமே ஒருவரை யொருவர் புரிந்து கொண்டு அக்கறையோடு செயல் பட்டால்தான் அது கல்வியாகும்.***

அதனால்தான் கல்விக்கூடத்தை ஊட்டி வளர்க்கும் அன்னை என்றழைக்கும் பழக்கம் நம்மவர்களிடம் இருக்கிறது.

கல்விக்கூடத்தை தாய் என்றால், கற்பிப்பவர்கள் தந்தையாகவும், தாயாகவும்தானே ஆக முடியும்!

அதனால்தான் இங்கு சந்ததி என்பதற்கு மரபு என்ற பொருள் பகரப்படுகிறது. ஆத்மனை அறிவின் கருவூலம் என்று அறிபவர் அனைவரையும் சமமாகத்தான் கருதுவார். அறிவை, ஞானத்தை அனைவருக்கும் சமமாக வழங்குவார்; ஞானவழி மரபை உயர்நிலைக்குக் கொண்டுவருவார். அதுவே இந்தச் சொற்றொடர் மூலம் விளங்குகிறது.

அவனது வழித்தோன்றல்களில் பரம்பொருளை [பிரம்மத்தை] அறியாதவர்கள் இருக்கமாட்டார்கள் என்று பதவுரை தருகிறீர்களே, குலம் என்றுதானே போட்டிருக்கிறது, குலம் என்றால் சாதிதானே, இந்த உபநிஷத்து மறைமுகமாக சாதி உணர்வைத்தானே வளர்க்கிறது, அதை மறைக்க வழித்தோன்றல் என்று பொருள் கொடுத்து அதை மறைக்கலாமா?
என்ற கேள்வியும் எழலாம்.

அதற்கும் பதில் சொல்லித்தான் ஆகவேண்டும்.

தாய்க்குலம் என்று சொல்கிறோமே, அப்படி யென்றால் தாய் என்பது ஒரு சாதியா, இல்லையே!

பெண்கள் அனைவரும் தாய் ஆகிறார்கள், எனவே அவர்கள் அனைவரையும் ஒருமைப்படுத்தி, தாய்க்குலம் என்று வழங்கப்படுகிறது.

அதுபோலத்தான் ஒரே மாதிரியானவர்களைக் குலம் என்று சொல்லப்படுகிறது.

இங்கும் அதேமாதிரியான கருத்துடன்தான் குலம் என்று கூறப்படுகிறது.

மெய்ஞானத்தால் பரம்பொருளை அறிய இயலும் என்னும் போது, அப்படிப்பட்ட அறிவை, ஞானத்தைக் கற்பிப்பவர்கள் அந்த அறிவை வாழையடி வாழையாகத் தனது சீடர்களுக்குக் கற்பிக்கிறார்கள.

எனவே அந்த மெய்ஞானத்தை அறிபவர்களின் குமுகம், கூட்டம், குழு, வழித்தோன்றல்கள் [வழி வழியாக மெய்ஞானத்தைக் கற்பவர்கள்] பரம் பொருளின் ஞானத்தைப் பெற்றிருப்பார்கள் என்று உபநிஷத்து உரைக்கிறது.

இங்கு ஆதி சங்கரரின் விளக்கத்தையும் அறிந்து கொள்வது மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

இரண்டாம் எழுத்தான **‘உ’** காரத்திற்கும், தைஜஸனுக்கும் என்ன ஒற்றுமை?

ஒரு பொதுவான சிறப்பியல்பாக உயர்வைச் சொல்லலாம். **‘உ’** என்ற ஒலி **‘அ’** வைவிடச் உயர்ந்தது.

அதைப்போலவே தைஜஸன் வைஸ்வாநரனை விட உயர்ந்தவன்.

இன்னொரு பொதுவான சிறப்பியல்பாகச் சொல்லக் கூடியது - **‘உ’**, என்பது அ’வுக்கும், ‘ம்’ க்கும் இடையில் இருக்கிறது; அதுபோல, தைஜஸனும், வைஸ்வாநரனுக்கும், ப்ராக்ஞனுக்கும் இடையில் இருக்கிறான்.

இப்பொழுது இந்த அறிவின் [ஞானத்தின்] விளைவு, பயன் விளக்கப்படுகிறது. அறிவு - **‘உ’** காரத்தை இனம் கண்டுகொண்டதனால் ஏற்படும் அறிவு - எப்பொழுதுமே அதிகமாகிறது.

அதாவது, அவனது அறியும் திறன் மிகவும் அதிகமாகிறது. இவ்வறிவு பெற்றவன் அனைவராலும் அவ்வாறே [அறிவாளி என்றே] அறியப்படுகிறான் அவனது நண்பர்களைப் போல அவனது எதிரிகளும்

அவனைக்கண்டு [அவனது அறிவைக்கண்டு] பொறாமைப் படுவதில்லை. மேலும், இவனது மரபில் [இவனிடம் அறிவைப் பெற்றவர்கள்] பரம்பொருளை அறியாதவர்களாக இருக்கமாட்டார்கள்.

**‘அ’** என்னும் ஒலி முதலில் வருவதால் அது அனைத்து ஒலிகளைக் காட்டிலும் உயர்ந்ததானாலும், **‘அ’** வுக்குப் பின்னால் வருவதால் **‘உ’** உயர்ந்தது என்று மறைமுகமாக எண்ண வாய்ப்பிருக்கிறது.

விஸ்வாநரன் தூலப் பொருள்களையே [ஐம் புலன்களால் உள்ளி உணர்வதையே] விரும்புவதாலும், அவனது அறிவு தூலப் பொருள்களையே நம்பி இருப்பதாலும், நுண்ணுணர்வு மூலம் அனைத்தையும் அறியும் தைஜஸன் விஸ்வாநரனைவிட உயர்வாக அறியப்படுகிறான்.

(11) **ஸுஷுப்தஸ்தான: ப்ராக்ஞோ மகாரஸ்த்ருதீயா மாத்ரா மிதேரபீதேர்வா மிநோதி ஹ வா இதஹும் ஸர்வமபீதிஸ்ச பவதி ய ஏவம் வேத ||**

அளப்பதினாலும், ஒன்றியதாலும், ஆழ்உறக்க நிலையினான அறிவாளி [ப்ராக்ஞன்] உண்மையில் ‘மூன்றாம் ஒலி [எழுத்து]யான ‘ம’காரமே [‘ம்’ என்ற

ஒலியே]. எவன் இவ்வாறு அறிகிறானோ [அவன்] இவை எல்லாவற்றையும் அறிந்து கொண்டு தன்னுள் ஒடுங்குகிறான். - 11.

**பதவுரை:**

------------

ஸுஷுப்தஸ்தான: - ஆழ்உறக்கநிலையில் இருக்கும்; ப்ராக்ஞ: - பிராக்ஞன் [அறிவாளி]; மிதே: அபி - அளப்பதினாலும்; அபீதே: வா - உள்ளே ஒடுங்குவதலுமே த்ருதீயா மாத்ரா - மூன்றாம் ஒலியான [எழுத்தான]; மகார: - 'ம'காரமே [ம் என்னும் ஒலியே]: ய: - எவன்; ஏவம் வேத - இவ்வாறு அறிகிறானோ; இதஹும் சர்வம் - இவை எல்லாவற்றையுமே [அறிந்துகொண்டு]; அபீதி: ச - உள் ஒடுங்குபவனாகவும் பவதி - ஆகிறான்; மினோதி ஹ வா - நிச்சயமாக உள் அளப்பவனாகவும் [ஆகிறான்].

**விளக்கம்:**

--------------

நாம் எதிர்பார்த்தபடி மூன்றாம் ஒலியான '**ம்**' ஆத்மனின் மூன்றாவது பகுதியான பிராக்ஞன் என்று

உபநிஷத்தின் பதினொன்றாவது சொற்றொடர் கூறு கின்றது.

முந்தைய சொற்றொடர்களைப் போலவே, பிராக்ஞனுக்கும் இரண்டு குணங்களைக் குறிப்பிடுகிறது - அளப்பவன், உள்ளே ஒடுங்குபவன் அல்லது ஒன்றுபவன்.

அளப்பவன் என்றால் எதை அளக்கிறான்? எங்கு ஒன்றுகிறான்?

ஆழ்ந்த உறக்க நிலையில் உள்ளே இறையுடன் ஒன்றுகிறான் என்றால் ஒருவகையில் ஒப்புக் கொள்ளலாம். ஆனால் எண்ணங்களின் குவியல்களாக இருக்கும் பிராக்ஞன் எதை அளக்கிறான்?

ஆதி சங்கரர் இதைப்பற்றி என்ன சொல்கிறார் என்று பார்ப்போம்.

ஒரு பயிர் வளரும்போது அது பலவிதமாக அளக்கப்படுகிறது. முதலில் விதையாக இருக்கும் அது, தூவப்பட்ட இடத்தில் முளைவிட்டு நிலத்தைவிட்டு வெளிக்கிளம்புகிறது. பிறகு நாற்றாக இருக்கும்போது அது இருக்கும் இடத்தைவிட்டு பெயர்த்தெடுக்கப்பட்டு

சரியான இடைவெளிவிட்டு, நன்கு வளரும்படி நடப்படுகிறது. அப்படி நடப்பட்ட பயிர் நன்கு வளர்ந்து, பூத்துக் கதிர்விடுகிறது.

இவை அனைத்தையும் குடியானவன் கவனித்து, பயிரின் வளர்ச்சியை அளந்து, அதற்கு நீர் பாய்ச்சு கிறான். அவன் அதிகமாகவும் நீர் பாய்ச்சுவதில்லை, குறைத்தும் விடுவதில்லை. சரியான அளவுக்கே நீர் பாய்ச்சுகிறான். நாற்றைப் பிடுங்கி நடும் முன்னரும், அது சரியான அளவுக்கு வளர்ந்திருக்கிறதா என்று அளவிட்டபின்னரே அதைச் செய்கிறான்.

கதிர் முற்றியபின்னரும், அது அறுவடை செய்ய த்தக்க நிலையை அடைந்துவிட்டதா என்று அளந்த பின்னரே அதை மேற்கொள்கிறான்.

அதைப்போலவே வைஸ்வாநரனும், தைஜஸனும் அவர்களது பரிணாம வளர்ச்சியின் போதும், உள் ஒடுங்கி, ஆழ்ந்த உறக்கத்தில் ஒன்றி பிராக்ஞனாக பரிணாம மாற்றமடையும் போதும் பிராக்ஞனால் அளக்கப்படுகிறார்கள்.

அதேமாதிரி ஓம் என்னும் சொல்லில் உள்ள அகாரமும், உகாரமும் ஒன்றி ஓங்காரமாகி 'ம்' முடன் ஒன்றுவதையே இச் சொற்றொடர் குறிக்கிறது.

மீண்டும் ஓங்காரத்தை ஒலிக்க, மகாரத்தி லிருந்தான் - **'ம்'** என்னும் ஒலி நின்ற பின்னரே, அகாரமும், உகாரமும் வெளிக்கிளம்பு கின்றன.

இன்னொரு விதமாக விளக்கினால், விழித்திருக்கும் போது ஆத்மனாகிய நாம் வெளியுலகி லிருந்து பெரும் அத்துணை உணர்வுகளும், அறிவுகளும், கனவுறக்க நிலையில் அதே ஆத்மனாகிய நாம் காணும் ஒளிமயமயமான நுண்ணுணர்வுகளும், தோற்றமற மறைந்து, ஆழ்உறக்க நிலையில் இருக்கும் ஆத்மனாகிய நம்மிடம் ஒடுங்கிவிடுகின்றன - மீண்டும் நாம் நனவு, கனவு நிலைக்குத் திரும்பும் வரையும்.

எனவே **பிராக்ஞன் வைஸ்வாநரன், தைஜஸன்** இவர்களின் எண்ணங்கள், உணர்வுகள், அறிவுகள் இவையெல்லாம் வைக்கப்படும் ஒரு கொள்கலமாக ஆழ்உறக்கநிலையில் இருக்கும் பிராக்ஞன் ஆகிறான்.

அதாவது வைஸ்வாநரனும், தைஜஸனும் ஆழ்உறக்க நிலையில் பிராக்ஞனுடன் ஒன்றி விடுகிறார்கள் - ஒடுங்கிவிடுகிறார்கள் - ஒன்றாக ஆகி விடுகிறார்கள்.

இப்படி எல்லாம் ஒன்றுக்குள் ஒன்றாக ஒடுங்குகிறது என்றால் என்ன, ஓங்காரத்தின் ஒவ்வொரு

ஒலியையும் அறிந்தவர் இப்படிப்பட்ட பலன்களை அடைவார்கள் என்று உபநிஷத்து சொல்கிறதே, ஒலியை ஆத்மனின் ஒவ்வொரு பகுதி என்று அறிவதா, புரிந்துகொள்வது கடினமாக இருக்கிறதே என்ற கேள்வி பிறக்கிறது.

இதற்கு பதிலாகச் சொல்லபடுவதுதான் தியானம்.

ஒரு மந்திரம் என்பது மனதிற்குள் சொல்லப் படுவது.

**ஓம்** என்பது ஒரு மந்திரம்.

இந்த மந்திரத்தை மனதில் சொல்லும்போது, மனதை ஒருநிலைப்படுத்தும் பொது - **'அ'** என்ற ஒலியிலோ, **'உ'** என்ற ஒலியிலோ, **'ம்'** என்ற ஒலியிலோ மனதை ஒருநிலைப்படுத்தித் தியானிக்கும்போது, தியானிப்பவர்கள், அவர்கள் மனதை ஒருநிலைப்படுத்தும் ஒலிக்குத் தகுந்தாவாறு வைஸ்வாநரனையோ, தைஜஸனையோ, பிராக்ஞ னையோ உணருகிறார்கள் / ஒன்றுகிறார்கள் / அறிகிறார்கள்.

அப்படி நடக்கும்போது தன்னுள் இருக்கும் ஆத்மனை அறிகிறார்கள். இதில் அறிதல் என்றால் சாதனைகள் செய்து,அனுபூதியில் அறிதல் என்பதனை கருத்தில் கொள்ளவேண்டும்.

அந்தந்த ஆத்மனின் பிரிவுக்குள்ள குணங்கள் அனைத்தும் கைவரப்பெறுகிறார்கள்.

அதுசரி, ஏன் வைஸ்வாநரன் தைஜஸனுடன் ஒன்றவேண்டும், அப்படி ஒன்றியபின், தைஜஸன் ஏன் பிராக்ஞனுடன் ஒன்றவேண்டும்?

இவர்கள் ஆத்மனின் மூன்று பிரிவுகள் தானே, ஏன் ஒவ்வொன்றாக ஒன்றுகிறார்கள் என்ற நியாயமான கேள்வியும் நம்முள் எழுகிறது.

உதாரணமாக, நாம் ஒரு பாத்திரத்தில் பாலை வைத்திருக்கிறோம் என்று வைத்துக்கொள்வோம்; அதை நான்காகப் பிரித்து, வெவேறு நிறங்களுடைய கண்ணாடிப் பாத்திரங்களில் ஊற்றிவைக்கிறோம் என்று வைத்துக்கொள்வோம். பாலின் நிறம் அது ஊற்றி வைக்கப்படும் கண்ணாடிப் பாத்திரத்தின் நிறமாகத் தானே தெரியும்?

முதல் பாத்திரம் மஞ்சள் நிறம் - அதனுள் இருக்கும் பால் [ஆத்மனின் பிரிவாகிய வைஸ்வாநரன் - நமது வெளிஅறிவால் உணரக்கூடிய அண்டம்]

இரண்டாம் நீல நிறப் பாத்திரத்தில் இருக்கும் பால் தைஜஸன் - அண்ட மனம்.

மூன்றாவது சிவப்புப் பாத்திரத்தில் பிராக்ஞன் இருக்கிறது.

அதுதான் குணமுள்ள ஈஸ்வரன் [சகுணப் பிரம்மம்] ஈஸ்வரனே அனைத்தின் தோற்றமாகவும், அதன் முடிவாகவும் இருக்கிறான்.

அவனே விழிப்புநிலையில் நாம் ஐம் புலன்களாலும் உணரும் அண்டங்களையும், கனவு நிலையில் காணும் உணர்வுகளையும், காட்சிகளையும், ஆழ் உறக்க நிலையில் ஒன்றுமில்லா நிலைக்கும் ஒன்று சேர்க்கிறான். நனவும், கனவும் ஒன்றுமில்லா நிலையில் [ஆழ்ந்த உறக்க நிலையில்] ஒன்றி விடுகின்றன.

முதலில் மஞ்சள் நிறமாக இருக்கும் பாத்திரத்தில் இருக்கும் பகுதி வைஸ்வாநரன் என்று வைத்துகொண்டு, அந்தப் பாத்திரத்தில் இருக்கும்

பாலை, நீல நிறத்தில் இருக்கும் பாத்திரத்தில் இருக்கும் பாலில் [தைஜஸன்] சேர்த்தால் பால் நீலமும், மஞ்சளும் சேர்ந்த பச்சை நிறமாகத் தெரியாது, நீல நிறமாத்தான் தெரியும். இப்பொழுது இரண்டும் இணைந்தாலும் ஒரே நிறமாகத்தானே நமக்குத் தோன்றுகிறது!

இப்படிச் சேர்த்த பாலை முன்பு இருந்ததுபோல மீண்டும் பிரிக்க முடியுமா? இரண்டறக் கலந்தது விட்டபின் அவற்றை தனித்தனியாக எப்படிப் பிரித்தெடுக்கமுடியும்?

தண்ணீரும், எண்ணையும் என்றால் - மணலும் சர்க்கரையும் என்றால் முடியும்.

ஏனென்றால், அவை தனித் தனியான பொருள்கள். ஆத்மன் தனித்தனி அல்லவே! ஒன்றாக இருந்த ஒன்றை இரண்டாகப் பிரித்து, ஒன்று சேர்த்தபின், முதலில் இருக்கும் பிரிவுக்கு எப்படிக் கொண்டு செல்ல இயலும்?

அடுத்தபடியாக நீலப் பாத்திரத்தில் இருக்கும் பாலை [இரண்டறக் கலந்த வைஸ்வாநரன் + தைஜஸன்] சிவப்புப் பாத்திரத்தில் இருக்கும் பாலுடன் [பிராக்ஞன்] ஊற்றினால், பால் கலவை ஊதா நிறமாகத் தெரியாது. சிவப்பாகத்தான் தெரியும். ஒன்றிய பால்

பிராக்ஞன்தான். இக்கலவையையும் பழையபடி பிரிக்க இயலாது.

இதற்கடுத்த நிலைதான் துரிய நிலை. ஓங்காரத்தின் இறுதி விளக்கம்.

(12) **அமாத்ரஸ்சதுர்த்தோ அவ்யவஹார்ய: ப்ரபஞ்சோபஸ’ம:**
**சி’வோஅத்வைத ஏவமோங்கார ஆத்மைவ**
**ஸம்விஸ’த்யாத்மநாத்மானம் ய ஏவம் வேத ய ஏவம்**
**வேத ||**

செயல் ஒன்றுமில்லாத, ஒலியற்றவனுமான, நான்காமவன் [துரியன்] அண்டத்தைத் முடிவுறச் செய்பவன், மங்கலமானவன், இருமையற்றவன், இப்படிப்பட்ட ஓங்காரம் ஆத்மன்தான். எவன் இப்படி அறிகிறானோ, அவன் தானாகவே தன்னுள் [ஆத்மனுள்] ஒன்றுகிறான். - 12

## பதவுரை:

-------------

அவ்வியவஹார்ய: - செயல்களற்றவன்; மிதே அமாத்ர: ச - ஒலி இல்லாமல் இருப்பதாலும்; சதுர்த்த2: - நான்காமவன் [துரியன் ஆகிறான்]; பிரபஞ்ச உபச’ம:

- அண்டத்தை [அனைத்து நிகழ்வையும்] முடிவுறச் செய்பவன்; சி'வ: - 'மங்கலமானவன்; அத்3வைத:: - இருமையற்றவன்; ஏவம் ஓங்கார: - இப்படிப்பட்ட ஓங்காரம்; ஆத்ம: ஏவ - ஆத்மனே; ய: - எவன்; ஏவம் வேத3 - இவ்வாறு அறிகிறானோ; ஆத்மனா - தன்னால் [தானாகவே]; ஆத்மானம் - தன்னை [தன்னுள் இருக்கும் ஆத்மனுடன்]]; ஸம்விஸ'தி - ஒன்றுகிறான்.

**விளக்கம்:**

**--------------**

இந்த சொற்றொடரில் பரம்பொருளுடன் ஒன்றுவது எப்படி என்று சொல்லப்படுகிறது.

அத்துடன் மட்டுமல்ல, **'ஓம்'** என்ற சொல் மூன்று ஒலிகளால் ஆனது மட்டுமல்ல, நான்காவதாக ஒலியற்ற நிலைமையும் ஓங்காரத்திற்கு இருக்கிறது, அதுவே ஆத்மனின் **'துரிய'** நிலை என்றும் எடுத்துரைக்கிறது.

அந்நிலையில் ஆத்மன் செயல் எதுவும் ஆற்றுவதில்லை. அந்நிலையில் - ஆத்மனின் செயலற்ற நிலையில் - அண்டமே - நனவில் திடப்பொருளாகக் காணப்படும், கனவுநிலையில் ஒளிமயமான உணர்வுகளாகத் தோன்றும், ஆழ் உறக்க நிலையில்

எண்ணங்களின் குவியலாக உருவமற்று இருக்கும் - அந்த அண்டமே முடிந்துபோகிறது.

ஈஸ்வரன் என்று அழைக்கப்படும் காரிய, காரணங்கள் உள்ள பரம்பொருள், சிவமாக, மங்கலமான ஒன்றாக, தான் வேறு, மற்ற உயிர்கள் - ஜீவாத்மாக்கள் வேறு என்ற மாயத்தோற்றம் இல்லாது - இருமையில்லாது ஒன்றாகி நிற்கிறான் / நிற்கிறாள்/ நிற்கிறது.

## முதலீட்டியம் / ஒருமை

இதையே அறிவியல் ஒருமை, முதலீட்டியம் [singularity] என்று சொல்லுகிறதோ என்னவோ! பெருவெடிப்பு நிகழ்ந்து அண்டம் உருவாகும் தருணத்தில் அவ்வண்டமே ஒரு முதலீட்டியமாக /ஒருமையாக - இனம் பிரித்து அறியாதவண்ணம் ஒன்றாக இருந்தது என்று பொதுச் சார்பியல் [ஜெனரல் ரிலேட்டிவிட்டி] கூறுகிறது.

துரியன் இருமையற்றவன் என்றால் அவனை ஒரு முதலீட்டியம்/ஒருமையானவன் என்று சொல்வதில் பிழை இருக்கிறதா என்ன?

அது மட்டுமல்ல, பால்வெளி மண்டலங்கள் [galaxies] உருவாகக் காரணமான கரும் துளைகள் [black holes] உள்ளே முதலீட்டியம் உள்ளது என்றும் அறிவியல் ஆராய்ந்து உரைக்கிறது.

எதுவும் உருவாகாமல் ஒன்றி இருந்த ஒன்று, இருமையில்லாமல் இருந்த ஒன்று - பால்வெளி மண்டலங்கள், மற்றும் பெரும்வெடிப்பு தோன்றி அண்டமே உருவாக வழிவகுத்தது - என்று அறிவியலே சொல்லும்போது, அந்த முதலீட்டியமே பரம்பொருள், ஆத்மன் என்று பொருள்கொள்வதில் தவறென்ன!

<u>இந்த வழியிலேயே தொடர்ந்தால் -</u>

1. இங்கு நாம் காணும் அண்ட சராசரங்கள் அனைத்தும் ஒரு முதலீட்டியத்திலிருந்துதான் - பெருவெடிப்பின் மூலம் தோன்றின.

2. அப்படித் தோன்றியவை அனைத்தும் அந்த முதலீட்டியத்தில்தான் இருந்தன.

3. உயிரும் அந்த முதலீட்டியத்திலிருந்துதான் தோன்றியிருக்கவேண்டும்.

4. நாம் கண்ட, காணும், காணப்போகும் அனைத்தும் அந்த முதலீட்டியத்திலிருந்துதான் வந்தன.

5. இவ்வண்டத்தில் நாம் காணும் சக்தி அனைத்தும் அந்த முதலீட்டியத்திலிருந்துதான் வந்தன.

6. இவ்வண்டம் தோன்றுமுன்னே முதலீட்டியம்தான் இருந்தது. எனவே அந்த முதலீட்டியத்தினுள்தான் அண்டமே ஒடுங்கி இருந்த்திருக்கவேண்டும்.

7. இந்த அண்டம் தோன்றும் முன்னர் முதலீட்டியம் செயலற்றே இருந்திருக்கவேண்டும்.

8. எனவே இந்த முதலீட்டியத்தையே - ஆத்மனின் நான்காம் பகுதியான - வைஸ்வாநாரன், தைஜஸன், பிராக்ஞன் இவற்றை உள்ளடக்கிய - ஓங்காரத்தின் நான்காவது ஒலியற்ற ஒன்றாக - துரியனாக அறியலாமே.

நாம் வெளியில் இருந்து, நனவு உலகிலோ, கனவு உலகிலோ, ஆழ்ந்த உறக்க நிலையிலோ, துரிய நிலையை எய்த முடியுமா? இயலவே இயலாது!

ஏனெனில், வெளியில் இருந்து நோக்கும்போது இருமைகள்தான் இருக்கும், ஒருமை இருக்காது.

எனவே, அந்த ஒருமையான பரம் பொருளின் பால் சித்தத்தைச் செலுத்தி எண்ணங்களற்ற நிலையில் நிகழ்காலத்தில் நிற்கின்ற நிலையை அடையும் போதுதான், அப்பரம்பொருளுடன் நாம் ஒன்ற இயலும்.

**‘அ’** விலிருந்து **‘உ’** வுக்கும், **‘ம்’** க்கும் வருவோம்.

பகவான் ஸ்ரீஆதிசங்கரர் என்ன சொல்கிறார், துரியனைப் பற்றி?

அவர் பரம்பொருளையே இரண்டு விதமாகப் பிரிக்கிறார், **சகுணப் பிரம்மம், நிர்குணப் பிரம்மம்** என்று கூறுகின்றார்.

இந்த சகுணப் பிரம்மமே - குணங்களுடன் கூடிய **ஈஸ்வரனே** - இவ்வண்டத்தின் தோற்றத்திற்கு

காரணமாக இருக்கிறார். அந்த ஈஸ்வரனை [சகுண பிரம்மத்தை] அறிய, கௌடபாதரின் காரிகையில் (விளக்கம்) உள்ள சுலோகத்தின் 26ம் சுலோகத்தின் முதல் வரிப்படி மனதை ஒருநிலைப்படுத்தவேண்டும் என்கிறார்.

அந்த முதல் வரி எது?

**ப்ரணவோ ஹ்யபரம் [ப்ரணவ: ஹி அபரம்] ப்ரஹ்ம**
**ப்ரணவஸ்'ச பர: ஸ்ம்ருத: |**

[பிரணவமான] ஓங்காரமோ எனில் மற்றொரு பிரம்மமே! [பிரணவமும்] ஓங்காரமும் பரப்பிரம்ம மாகவே எண்ணப்படுகிறது. கூர்ந்து கவனித்தால் மற்றொரு பிரம்மம், அப்படியே எண்ணப்படுகிறது என்று சொல்லப் படுவதைக் காணலாம்.

மற்றொரு பிரம்மம் என்பதுதான் சகுணப் பிரம்மம் [பரம்பொருள்/ஈஸ்வரன்]. பரம்பொருளை முதலில் அறிய விரும்புபவர்கள் - அதாவது, முதல் முயற்சி எடுப்பவர்கள் - ஓங்காரத்தைப் பரம்பொருளாக [ஈசனாக] எண்ணித் தியானிக்கவேண்டும் என்றும் கூறப்படுகின்றது. மேலும், தியானம் செய்யப் புகுபவர்கள் - அனைத்தையும் வெளியுலகின் வாயிலாக

அறிபவர்கள் - அம்மாதிரித்தான் தியானம் செய்ய - மனதை ஒருநிலைப்படுத்த இயலும்.

எனவேதான் *அகர, உகர, மகரமாக*, ஒலியாக நிற்கும் ஈசனை, பரம்பொருளை, ஓங்காரத்தை தியானம் செய்யவேண்டும். இது கைகூடினால் '**சகுண சமாதி**' நிலை கிட்டும்.

* இந்நிலையை அடைந்தவர்கள் மீண்டும் பிறப்பு, இறப்பு என்ற **காரண, காரியம்** உள்ள இவ்வண்டத்திற்குத் திரும்பி வருவார்கள்.

அதன்பின் ஒலியற்ற ஓங்காரமான துரியனை, நிர்குணப்பிரம்மத்தின்பால் ஒருநிலைப்படுத்த வேண்டும்.

இப்பொழுது இரண்டாம் வரிக்குச் செல்வோம்.

**அபூர்வோஅனந்தரோஅபா3ஹ்யோஅனபர: ப்ரணவோஅவ்யய: ||**

முன்தோற்றமற்றதும், முடிவற்றதும், வெளியில் இல்லாததும், தனித்தன்மை வாய்ந்ததுமான ஓங்காரம் மாற்றமில்லாதது.

முன்தோற்றமற்றது என்றால் என்ன?

இதற்குமுன் எதுவும் தோன்றவில்லை, இதுவேதான் இருந்து வருகிறது, இதை யாரும் படைக்க வில்லை, உருவாக்கவில்லை, இதுவும் தோன்றவில்லை.

தோன்றவில்லையா, அப்பொழுது இது எப்படி இருக்கமுடியும் என்ற கேள்வி எழுகிறது.

நமது வெளியுலக உணர்வுப்படி நோக்கினால் - ஒன்று தோன்றியது என்றாலே, அதற்குத் துவக்கம் இருக்கவேண்டும், அதை யாராவது உருவாக்கி இருக்கவேண்டும் என்றுதானே பொருள்?

அப்பொழுது அது பரம்பொருளாக இருக்க முடியுமா? முடியாதே!

அதனால் அப்பரம்பொருள் தோற்றமற்றது, துவக்கமற்றது. அது எப்பொழுதும் இருக்கிறது.

இது முடிவும் அடையாதது: முடிவு என்று ஒன்று இருந்தால் அதற்குத் துவக்கம் என்றும் ஒன்றும் இருக்கவேண்டும் அல்லவா! எனவே, துவங்காத ஒன்று முடிவும் அடையாது.

**அது வெளியிலும் இல்லை என்றால் என்ன?** எல்லாமே அதுதான், அப்பரம்பொருள்தான்! எனவே எதுவும் அதற்கு வெளியில் இருக்கமுடியாது.

அறிவியல்படி நோக்கினால், பெருவெடிப்புக்கு முன் அண்டமே இல்லை, அண்டத்தில் இருக்கும் எதுவுமே இல்லை. அண்டமே அண்டத்தில், பரம் பொருளுள் அடங்கி இருந்தது.

அந்நிலையில்தான் நிர்குணப் பிரம்மமும் இருக்கிறது.

தனித்தன்மை வாய்ந்தது: இப்படிப்பட்டது எதுவும் இருக்கிறதா என்றால் இல்லை என்றுதான் கூற வேண்டும். அப்படிப்பட்டது தனித்தன்மை வாய்ந்த ஒன்றுதானே!

அப்படி தோற்றமும் இல்லாமல், முடிவும் இல்லாமல், வெளியிலும் இல்லாத, தனித்தன்மை வாய்ந்த அது மாற்றமின்றித்தான் இருக்கும். அங்கு *காரணமும் இல்லை, காரியமும் இல்லை.*

ஒரே அமைதிதான்.

படைப்பும் இல்லை, காப்பும் இல்லை, அழிப்பும் இல்லை, மறைப்பும் இல்லை, அருளும் இல்லை. எல்லாம் ஒய்ந்துபோன நிலையில் எதுவுமில்லாமல் **“சிவனே”** என்றிருக்கும் நிலை.

அந்த நிலையில் இருக்கும் - ஒலியற்ற ஓங்காரமாக இருக்கும் இறைவன்/வி ஆணுமல்ல, பெண்ணுமல்ல, அலியுமல்ல, அதுவுமல்ல.

ஏனெனில் அதை வெளியில் இருக்கும் எதுவும் பார்க்கமுடியாது, அளவிடமுடியாது - ஏனென்றால் அந்த அமைதியான நிலையில் வெளியில்தான் எதுவுமே இல்லையே!

***இப்படிப்பட்ட பரம்பொருளை அடைய, <u>அதுவேறல்ல, நான் வேறல்ல</u> என்று உணர்ந்து அதனுடன் ஒன்றிப் பரம்பொருளாகவே ஆக, ஒலியற்ற ஓங்காரத்தை தியானம் செய்து மனத்தை ஒருநிலைப் படுத்தவேண்டும்.***

இப்படித் தன்னுள் இருக்கும் பரம்பொருளுடன் ஒன்றுவதே, இரண்டற்ற [வேறுபாடற்ற/பிரித்தறியாத] ‘**நிர்விகல்ப சமாதி நிலை**’ எனப்படுகின்றது.

* இந்நிலையை அடைந்தோருக்கு இவ்வுலகம் இல்லை, **பிறப்பு இறப்பு** என்னும் **காரிய, காரணம்** இல்லை.

ஆணவம், கர்ம வினைகள், மாயையினால் கட்டப்படாது - அவை நீங்கி - தான், தனது, எனது, மற்றவை, என்ற எண்ணங்கள் இல்லாமல் - பிறித்தறியாமல் - எல்லாமே ஒன்று என்று இருமையற்ற நிலையில், ஒருமையாகி - ஓங்காரத்துடன், அந்த பரம்பொருளுடன் இரண்டறக்கலந்து ஒன்றிய அவர்கள் - பரம்பொருளாகவே ஆகிவிடுகிறார்கள், இனி இருமைகள் இல்லை, என்றும் நிலையான பேரின்ப நிலை ஒன்றையே அவர்கள் எய்துகின்றார்கள்.

**ஓம் தத் சத்!**

[நிறைவு பெறுகிறது]

# மாண்டூக்ய உபநிஷதம்



## உபநிஷத்தைப்பற்றி:

---

எல்லா உபநிஷத்துகளிலும் மிகவும் சிறியதான இந்த உபநிஷதம் அதர்வண வேதத்தில் உள்ளது. மாண்டூகேர் என்ற முனிவரால் கேட்கப்பட்டு எழுதப்பட்ட இதில் மொத்தம் பன்னிரண்டு சுலோகங்களே உள்ளன.

இருப்பது ஒன்றே என்ற இந்தக் கருத்தை "ஓம்" என்ற பிரணவ மந்திரத்தின் மூலம் இந்த உபநிஷதம் விளக்க முயற்சிக்கின்றது.

அடிப்படை உண்மைகள் மூன்று. அவை **உலகம், மனிதன், இறைவன்.**

இந்த மூன்றும் ஒன்றே அது ஓங்காரமே என்பதின் மூலம் இந்த உபநிஷதம் சுட்டிக் காட்டுகின்றது.

நான்கு பரிமாணங்களை உடையவர்கள் நாம் என்கின்றது இந்த உபநிஷதம்.